



□ யுத்த காண்டம்

□ தூயவன்

□ தமிழ்த்தாய் வெளியீடு

□ 05.07.2004

□ நிலா பதிப்பகம்
யாழ்சாலை
கிளிநொச்சி.

□ 80 /=

# அணிந்துரை...

தூயவனின் இன்னொரு மருத்துவப்போர் நாவலாக யுத்தகாண்டம் வெளிவருகின்றது. திருதராட்டினனுக்குக் கண்தெரியாத காரணத்தால் சஞ்சயன் தன் ஞானக்கண்ணால் பாரதப்போர் நடவடிக்கைகளைக் கண்டு கூறியது போல் தூயவன் எங்களுக்கும் போர்முகச் செயற்பாடுகளைத் தன் ஊனக்கண்ணால் கண்டு கூறுகிறார்.

யுத்த காண்டம் ஒரு படையணி நகர்வினை நுணுக்கமாகச் சித்தரிக்கும் நாவலாக அமைகின்றது. புறு நானூற்றுப் பாடலொன்று (225) படை நகர்வினைச் சிறிது உயர்வுநவிற்சியாகக் கூறுகின்றது. சோழன் நலங்கிளியினுடைய படையின் நகர்வு தொடங்கி விட்டது. முன்னணி வீரர் பனையின் நுங்கினைக் குடித்துச் செல்கின்றனர். இடையணி வீரர் பனம் பழம் உண்டு செல்கின்றனர். இறுதியாக வரும் அணியினர் சுட்ட பனங்கிழங்கு தின்று செல்கின்றனர். இவ்வாறு சோழன் நலங்கிள்ளியின் படைப் பெருக்கத்தை ஆலத்தூர் கிழார் மிகைபடக் கூறுகின்றார். ஆனால் தூயவனோ 32 கிலோ மீற்றர் தூரத்தினை ஒரு படையணி நடந்து நகர்ந்து செல்வதை உடன் நகர்ந்து விவரிக்கிறார். ஒரு படப்படிப்புக் கருவியைக் கையிலே கொண்டு அதன் வில்லையூடாகப் பலவற்றை தூரப் பார்வையாகவும் அண்மித்த பார்வையாகவும் எமக்கு வழங்குகிறார். இப்படையணி நகர்வினைக் காண ஆயிரம் கண்கள் வேண்டுமெனக் கூறப்படுகிறது.

“ஆண் போராளிகளும் பெண் போராளிகளும் தங்களிற்குரிய ஆயுதங்களுடன் நிமிர்ந்த நடையும் நேரிய பார்வையுமாக விரைந்து வரும் காட்சி மனதில் ஒரு புதிய உற்சாகத்தை ஏற்படுத்துகிறது” இந்தப் படையணி புரியும் சமர், அச்சமரிலே காயமுற்ற வீர வேங்கைகளை மருத்துவப் போராளிகள் பராமரிக்கும் பக்குவம் இந்த நாவலிலே சித்திரிக்கப்படுகின்றன.

தமிழீழப் போர் வரலாறு பல வியக்கத்தக்க சாதனைகளைத் தன்னுள் அடக்கியுள்ளது. அவற்றுள் ஒன்று காயமடையும் போராளிகளைக் காப்பாற்றும் மருத்துவ நடவடிக்கையாகும். தூயவன் ஒரு மருத்துவப் போராளி. முன்னணியிலே போர் நடக்க பின்னணியிலே காயமுற்றவரைக் காப்பாற்றும் போர் இப்போரிலேபங்கேற்ற தூயவன் அதனை மீண்டும் இந்த யுத்த காண்டத்திலே விவரிக்கிறார்.

தமிழீழ வானிலே மிதந்த இனிய கானங்களைப் பாடிய சிட்டு யத்தகாண்டம் சித்தரிக்கும் களத்திலேயே மாவீரனாகிறான். பாரிய காயத்துடன் வரும் அவ்வரிப்புலிக் குயிலினைக் களமுனை விட்டு வேகமாக வெளியேற்ற முயற்சிக்கும்போது இன்னொரு எறிகணை அங்கு விழுந்து காயமடைந்த அம்மறவனை மாவீரனாக்குகின்றது.

“ஆம் ஈழ விடுதலைக்காக உறுமிய புலியொன்று தன் பேச்சடங்கியது. பாடிய குயிலொன்று தன் மூச்சடங்கியது.” என்று நாவலாசிரியர் கூறுகிறார். தூயவன் வியக்கத்தக்க எழுத்தாளன் மருத்துவக் கலையும் போர்க்கலையும் தூயவனிலே இணைவுற்றுள்ளன. இத்தகைய கலவை மிகவும் அரிதானது. உலகு போற்றும் எழுத்துருவினை உருவாக்க வல்லது. இவருடைய இன்னொரு போர் முகம், இந்த யுத்த காண்டம் ஆகியன தூயவனின் வியக்கத்தக்க எழுத்தாற்றலை வெளிப்படுத்துகின்றன. தமிழ் மொழி கணிணிக்கு முகம், கொடுக்கின்றது. இணையத்துக்கு முகம் கொடுக்கின்றது. இங்கே தூயவனுடைய மருத்துவப் போரியலுக்கு முகங்கொடுத்துக்கொண்டிருக்கிறது. எடுத்துக் காட்டாக,“எப்படியோ இரத்தம் வெளியேறி விட்டது. பலமான முறிவுக்குரிய வலி. ஆள் அதிர்ச்சிக்குப் போய் விட்டாள். நாடித்துடிப்பு விதம் அதிகமாகவும் துடிக்கும் தன்மை பலவீனமாகவும் உள்ளது. சுவாசம் ஆழமற்றதாகவும் விரைவானதாகவும் நடைபெறுகின்றது. குருதி

வெளியேற வேறு காயமும் இருக்க வேண்டும். உடன் ஆடைகளைக் களைந்து பார்க்கிறார்கள். முதுகுப்புறம் ஊடுருவும் காயம் உள்ளகக் குருதிப் பெருக்கு ஏற்பட்டிருக்கிறது. எப்படியும் காப்பாற்ற வேண்டும். உடனே திரவ ஊடகத்தை நாளத்தினூடு ஏற்றச் சொல்லிவிட்டு இவர்கள் இருவரும் காலை வெட்டி அகற்றும் முயற்சியில் இறங்கினார்கள்" என்னும் பகுதி கால் முறிந்து வந்த ஒரு பெண் போராளியின் மருத்துவநிலையினைக் கூறுகின்றது. தூயவனின் மொழிப்பயன்பாடு சிறப்புற்றமைகிறது.

காவியங்களிலே யுத்த காண்டம் முடிவடைந்து விடும். அந்த யுத்தத்திலே களமாடியவர்கள் மறக்கப்பட்டு விடுவர். ஆனால் மருத்துவப் போராளியான தூயவன் என்னும் படைப்பாளியின் இச்சிறிய யுத்த காண்டம் மனிதாய உணர்வுடன் அதே வேளை யதார்த்த நிலையினை நினைவுபடுத்துவதாக முடிவடைகின்றது.

"ஓ.......என் தேசமே! நீ விரைவில் விடுதலையடைவாய், அப்பொழுது வீரச்சாவை தழுவியவர்கள் தவிர, விழுப்புண்ணடைந்தவர்கள், முண்ணாண் சிதைந்து இயங்க முடியாதவர்கள், அங்கங்களை இழந்தவர்கள் என கணிசமானவர்கள் உன்னில் நடமாடுவார்கள். அவர்களை சுமையாக நினைப்பாயா? இல்லை சுகமாக நினைப்பாயா? "

பரபரப்பான படையணி நகர்வினையும் போரினையும் படைத்த படைப்பாளி பாரிய விளை நிலை உண்மையினை எமக்கு முன் வைத்து விடை

*பேராசிரியர்.*

***அ. சண்முகதாஸ்***

## வெளியீட்டுரை.......

போரும் போர் சார்ந்த சூழலும் ஒரு மனிதனை கோழையாக்கி விடுவதில்லை. மாறாய் தான் வாழும் தாயகத்தில் மாற்றானால் ஏற்படுத்தப்படுகின்ற வன் முறைகள் அவனுள் விடுதலையுணர்வையும் தேசப்பற்றையும் சுதந்திரத்திற்காய் பழுச்சுமக்கும் மனப் பக்குவத்தையும் ஏற்படுத்தி விடுகின்றது. அந்த மாற்றத்தினால் தூண்டப்பட்ட மனிதனே போராளியாகின்றான். அந்த மனிதர்களின் போரியல் இன்ப துன்பங்களையும் களநிலை வாழ்வையும் இங்கே படைப்பாக படைத்திருக்கிறார் தூயவன் அவர்கள்.

தமிழீழ விடுதலைப் போராட்டத்தின் பக்கங்களை வெளிக்கொணர வேண்டுமெனும் பேரவாவில் உள்ள எமது தலைவரின் எதிர் பார்க்கைக்கு வடிவமிடும் முயற்சியாக எமது வெளியீட்டகத்தின் படைப்பாக இவ் நூலை பதிப்பித்து பரவல் செய்வதையிட்டு நிறைவடைகின்றோம்.

நன்றி

"புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்"

*வெளியீட்டுப் பிரிவு.*

அரசியல் துறை

தமிழீழம்

## என்னுரை...

தமிழரின் தேசிய பலத்தைச் சிதைக்க எதிரி எடுத்துக் கொண்ட முயற்சிகள் பல. அவற்றில் முதன்மையானது "ஜெயசிக்குறு" இராணுவ நடவடிக்கை. இராட்சத இராணுவ இயந்திரமாகப் புறப்பட்ட அது வன்னிமண்ணை இரண்டறுத்து சிதைக்க முனைந்தது. அதனை முறியடிக்க முறியடிப்புச் சமர்கள் பல நடாத்தப்பட்டன. அவற்றில் "செய் அல்லது செத்துமடி" எனவர்ணிக்கப்பட்ட ஊடறுப்புச்சமர்கள முக்கியமானவை. அதில் மூன்றாவது சமரின் சில பக்கங்கள் இங்கு "யுத்தகாண்டம்" எனும் புத்தகமாக வெளிவருகின்றது இச்சமரில் போராளி மருத்துவனாக கலந்து கொள்ளச் சந்தர்ப்பம் கிடைத்திருந்ததுற்றிட்டியதாகவே நகர்கின்றது. இச்சமருக்கான வேவுத்தகவல் களைத்திரட்டுதல், ஒத்திகை பார்த்தல், முன் கூட்டியே உள்நுளைந்து நிலையெடுத்தல் போன்ற இன்னோரின்ன சந்தர்ப்பங்களில், போராளிகள் சந்தித்த சோதனைகளும், வேதனைகளும், அவர்களால் மேற்கொள்ளப்பட்ட சாதனைகளும் இங்கு பதியப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

சமர்களின் முடிவுகள் எவ்வாறு அமைந்தாலும் மருத்துவ

இலக்கில் மாற்றம் ஏற்படுவது அரிது. அதனைப் பதிவு செய்யச் சந்தர்ப்பம் கிடைத்ததையிட்டு மகிழ்வடைகின்றேன். எனது முன்னைய ஆக்கங்கள் வெளிவருவதற்கு காரணமானவர்களே இதற்கும் உந்து சக்தியானார்கள். அவர்களுக்கும், இப்பதிப்பிற்கு முன்னுரை தந்து பெருமையுறவைத்த பேராசிரியர் அ. சண்முகதாஸ் அவர்களுக்கும் வெளியீட்டுப் பிரிவு பொறுப்பாளர் திரு. அன்ரனி அவர்களுக்கும், தமிழத்தாய் வெளியீட்டகத்தினருக்கும் எனது நன்றிகள் உரித்தாகட்டும்.

***–தூயவன்–***
***(சுரேஸ்குமார்)***

நெஞ்சில் தாயக விடுதலையையும்
தோளில் விடுதலையின் பாரத்தையும்
என்நாளும் சுமந்தவர்களாய்
களத்திடை புலியாய்ச் சீறிப்பொருதி
விழி மூடித் துயில்கின்ற
மாவீரச் செல்வங்களுக்கு
இதைக் காணிக்கையாக்குகின்றோம்.

---

பகலவன் தன் கதிர்களின் வெம்மையைக் குறைத்து மேற்கை நோக்கிப்பயணிக்கத் தொங்கிவிட்டான். தன் பொன்னிறக்கதிர்களினால் வன்னிமண்ணைச் செந்நிறமாக்கி எழில் கூட்ட எண்ணினானோ அன்றி தன் வெம்மையை விஞ்சிய வரிப்புலிகளின் போர்த்திறனை கண்ணுற எண்ணினான் போலும் தன் பயணத்தை சற்று மந்தமாகவே மேற்கொள்கிறான். நீண்ட நெடும் கரும் வீதியின் குன்றும், குழியுமான நிலை இம்மண்ணின் வரலாற்றை நினைவூட்டுகின்றது. வீதியோரங்களிலும், வீதியிலும் வீழ்ந்து வெடித்திருந்த ஆட்லறி எறிகணைகளின் கந்தகநெடியும், சிதறிக்கிடந்த எறிகணை சிதறல்களும், கற்களும், முறிந்து வீழ்ந்திருந்த மரக்கொப்புகளும், பருவம் முந்தியே உதிர்ந்த பச்சை இலைகளும் சூழலின் வழமைக்குமாறான அசாதாரணநிலையை பிரசவித்திருக்கின்றன. ஆனால் கடந்த இரண்டு மாதமாக இம்மண்ணிற்கு இது ஒரு சாதாரணநிலையே. வீதியின் இருமருங்கிலும் கிட்டவாகவும், சற்றுஎட்டவாகவும், இறந்து அழுகி உருக்குலைந்து கொண்டிருக்கும் நாய்களினதும், கால்நடைகளினதும் துர்நாற்றம் கந்தகநெடியுடன் கலந்து காற்றுவீசும் போது இடையிடைவந்து நாசியைத் தாக்கியதால் அச்சூழலை மேலும் விகாரமாக்கியது.



வீதியின் ஓரமாக நிற்கும் பாலைமரத்தில் ஒருகாலை மடக்கிவைத்த வண்ணம் மறுகாலைநிலத்தில் ஊன்றியவண்ணம் மரத்தில் சாய்ந்து மார்புக்கு குறுக்காக கைகளைக் கட்டியவாறுநிற்கும் அவன் மனதில் பலவித உணர்வுகள் தலைகாட்ட முற்படுகின்றன. இம்மண்ணில் போர்புரிவதால் ஏற்பட்ட பெருமிதமா! அல்லது எம்மக்கள் படும் அல்லலை பல முறை நேரில்காண்பதால் ஏற்பட்டதாக்கமா? இல்லை தூரநிற்கும் உறவுகளை எண்ணியதால் ஏற்பட்ட ஏக்கமா? இனங்காண முடியாமல் தடுமாறுகின்றான். ஆனால் ஏற்படும் உணர்வுரேகைகள் அவன் முகத்தை குறுக்கறுத்து ஓடமுனைவதை அகக்கண்ணால் பார்க்க முடிகிறது. எதையோ எண்ணியபடி வடக்குநோக்கித் தன்பார்வையைத் திருப்புகிறான். நீண்ட வீதியின் இருமருங்கிலும் நிற்கும் பலவித உயர்ந்த மரங்கள் வீதிக்கு நிழற்குடை விரித்து அதன்கருமையை மேலும் அதிகரிக்க உதவுகின்றன.

சற்றுத்தொலைவில் இருந்து அவன் நிற்கும் திசையைநோக்கி வரிப்புலியுடை அணிந்த விடுதலைப்புலிகளின் படையணி நகரத்தொடங்கியிருந்தது. வீதியின் இடப்பக்கமாக ஆண்போராளிகளும் வலப்பக்கமாக பெண்போராளிகளும் தங்களிற்குரிய ஆயுதங்களுடன் நிமிர்ந்த நடையும், நேரிய பார்வையுமாக விரைந்துவருங் காட்சி மனதில் ஒரு புதிய உற்சாகத்தை ஏற்படுத்துகிறது.

மரத்தில் முட்டுக்கொடுத்திருந்தகாலை எடுத்து நிலத்தில் ஊன்றி நேராக நின்று அவர்கள் அணிவகுத்துவரும் இக்காட்சியை கண்களால் பார்க்கிறான். இக்காட்சியை காண ஆயிரம் கண்கள் வேண்டுமென எழுந்த வரிகளை இடைமறிக்கின்றது எதிரிவிடும் வரலாற்றுத்தவறின் கணபரிமாணம். இதன்விளைவுகளை பகைவன் உணரும்போது அதிலிருந்து அவனால் விடுபடமுடியாத நிலையே உருவாகும். "நீரில் நீராடுகிறேன் என இறங்கி முதலையிடம் காலைபிடிகொடுத்தால் எவ்வாறு இருக்குமோ அந்நிலை எதிரிக்கு ஏற்படும் என்பதே நிகழ்காலமாகும், எதிர்காலம் இதையே விரைவில் உணர்த்தப் போகின்றது.

அண்ணளவாக ஐந்து யார் இடைவெளிவிட்டு ஏ.கே. வகை ரைபிள்கள், எல்.எம் ஜிக்கள், ஆர்.பி.ஜி எறிகணைசெலுத்திகள், பெங்களூர் டோபிடோக்கள் என நாலாவித இலகு, கனரக ஆயுதங்களை சுமந்த வண்ணம் அவனை கடந்துசெல்கின்றனர் போராளிகள். அவர்களின் முகங்களை

அவதானிக்க முயல்கின்றான், இருபது தொடக்கம் முப்பது பராயத்திற்கு உட்பட்டவர்களாகவே அனைவரும் காணப்படுகின்றனர். அரும்புமீசையுடைய முகங்கள், பருவத்திற்கேயுரிய குறும்புகளை வெளிப்படுத்தும் சில முகங்கள், கடின பயிற்சிகளையும் பல போர்க்களங்களையும் கண்டதால் உணர்வுகளை வெளிக்காட்டாமல் விறைப்புடன் தென்படும் முகங்கள், வானம் இடிந்து விழுந்தாலும் கவலைப்படமாட்டோம் என்பதை உணர்த்துவனபோன்ற கள்ளமில்லா சிரிப்புடைய முகங்கள், சிரமப்பட்டு தங்களை போர்க்குணம் நிறைந்தவர்களாக மற்றவர்களிற்கு காட்ட முனையும் முகங்களென பலமுகங்கள் கடந்துசெல்கின்றன. எப்படித்தான் தங்கள் வதனங்களை வைத்திருந்தபோதும் தெரிந்தவர்கள் அருகில்வரும்போது "டொக்டர் போயிற்றுவாறம்" என ஒரு புன்சிரிப்புடன் விடைபெற்றே செல்கின்றனர். சாதாரண மருத்துவப்போராளிகளையும் ஏனையபோராளிகள் டொக்டர் என அழைப்பது இவர்கள் மத்தியில் ஒருமரபாகவே இருக்கின்றது. "ஓம் போயிட்டு வாங்கோ" வென்று வாங்கோ... மீண்டும் சந்திப்போம், அங்க சந்திப்போம்........." என விடை கூறுகிறபோது அவனை அறியாமலே அவன் ரோமங்கள் சிலிர்க்கின்றன.

2.30 மணியளவிலேயே அவனுக்கும் அறிவித்தல் தரப்பட்டிருந்தது. "குறுப் மூவ் பண்ணத்தொடங்கிற்று, நீங்களும் ஆயத்தமாகுங்கள்" என, அவர்கள் உடனடியாகத் தங்களை தயார்ப்படுத்துகின்றனர். ஒரு பிரதான மருத்துவநிலையை நிறுவுவதற்கான பொருட்களை ஏற்கனவே பகிர்ந்துவைத்திருந்தார்கள். இங்கு பிரதான மருத்துவநிலை எனப்படுவது களமுனைகளில் இருந்து காயமடைந்த போராளிகள் குருதிப்பெருக்குக் கட்டுப்படுத்தப்பட்ட நிலையிலேயே கொண்டுவரப்படுவர். அவர்களிற்கு இங்கு மேலதிகசிகிச்சைகள் அளித்து, மீளவுயிர்ப்பளித்து, சத்திரசிகிச்சை கூடத்திற்கு மேலதிக சிகிச்சைக்காக கையளிக்கப்படும்வரை, உயிரைப்பாதுகாப்பதற்கான செயற்பாடுகளே பொதுவாக நடைபெறும். இந்நிலை பொதுவாக களமுனைகளில் இருந்து நான்கு, ஐந்து கி.மீ கள் பின்னால் இருக்கும், ஆனால் இம்முறை இவ்வாறு இருக்கப்போவதில்லை, இதனை எண்ணியதால் என்னவோ அவன் மனம் விவரிக்கமுடியாத உணர்வுகளால் ஆட்பட்டிருந்தது. காரணம் இது ஒரு வித்தியாசமான சண்டைமுறை, இதுவரைகாலமும் நடைபெற்ற சண்டைகளில் அவர்களிற்கு தேவையான பொருட்களை வாகனங்களில் கொண்டு நகர்வதே வழக்கம். ஆனால் இம்முறை அனைத்துப்பொருட்களையும் அவர்களே தோழில் சுமந்து செல்லவேண்டும். இதனைவிட இன்னுமொரு காரணமும் இருந்தது, அவர்கள்தான் களநிலமைக்கு ஏற்ப முடிவெடுக்கவேண்டும். அவர்களின்

திட்டங்களில் சிறிதுபிசகல் ஏற்பட்டாலும் எதிரியினால் நாலாபக்கமும் சுற்றி வளைக்கப்பட்ட பிரதேசமொன்றில் அகப்பட்டுக்கொள்வார்கள். குறிப்பாகக்கூறினால் கொலைவலையம் ஒன்றினூடாக ஊடுருவப்போகின்றார்கள், எதிரியின் எறிகணைவீச்சு, விமானக்குண்டுவீச்சு என்பன அடிக்கடி இடம்பெறும் பிரதேசம், எதிரியும் எம்மவரும் நடமாடும் பிரதேசம், இருபகுதியினரதும் கட்டுப்பாட்டில் இல்லாத பிரதேசம், எதிரியின் கட்டுப்பாட்டிலுள்ள பிரதேசம் என்பனவற்றை அவர்கள் முதலில் கடந்து சென்று நிலையெடுக்கவேண்டும்.

தாக்குதல் ஆரம்பித்து 40 நிமிடத்தினுள் குறிக்கப்பட்ட பிரதேசத்தினை ஊடறுக்கும் கண்டி வீதியின் ஒரு பகுதியின் பிரதான மற்றும் மினிமுகாங்கள் அவர்களின் கட்டுப்பட்டில் வந்துவிடும். உடன் இவர்கள் வீதியைக் குறுக்காகக் கடந்து, அதாவது கிழக்கிலிருந்து மேற்காக வீதியைக் குறுக்கறுத்து விலகி குறைந்தது இரண்டு கிலோ மீற்றர் விலத்தியே தங்களின் மருத்துவப் பணிகளை ஆரம்பிக்கவேண்டும், எதிரி எதிர்பாராத வகைகளில் வியூகங்கள் அமைத்தால்தான் குறைந்த பலம் இருந்தாலும் வெற்றிகளை பெற முடியும். அதனால் தான் என்னவோ இப்படியான ஆபத்து நிறைந்த திட்டங்கள் உருவாக்கப்படுகின்றன போலும். ஆபத்துக்களை நோக்கி முன்னேறுங்கள் என 'காப்மேயர்' என்னும் எழுத்தாளர் தனது வெற்றியின் இரகசியம் புத்தகத்தில் குறிப்பிட்டிருந்தது ஞாபகத்திற்கு வருகிறது.

இவ் மருத்துவக் குழுவிற்கு மனோஜ் பொறுப்பாக நியமிக்கப்பட்டிருக்கின்றார். இவர்களிற்கு வழிகாட்டியாகவும், உறுதுணைக்காகவும் வன்னி மாவட்டத் தளபதி குமணன் நியமிக்கப்பட்டிருக்கிறார். இதனைவிட ஆண் போராளிகளுக்கு அருளும், பெண் போராளிகளுக்கு வான்மதியும் பொறுப்பாளர்களாக நியமிக்கப்பட்டிருந்தனர், இவர்களில் மொத்தம் 45 போராளிகள் உள்ளனர், வரைபடங்கள், தொலைத்தொடர்புக் கருவிகள், திசையறிகருவிகள் என்பன பொறுப்பாளர்களிற்கு வழங்கப்பட்டுள்ளது.

ஒவ்வொருவருக்கும் உணவுப் பொதியும், தண்ணீர்க் கானும் வழங்கப்பட்டிருந்தது. சுமார் 30 கி.மீ இவர்கள் நடக்க வேண்டும். எதிரிக்கு கண்ணாமூச்சி காட்டி, அவனை நோக்கி நகர்ந்து, பின் அவனை விலத்தி கிழக்காக நடந்து, பின் சமாந்தரமாக நடந்து, மீண்டும் அவனை நோக்கித் திரும்பி செங்குத்தாக நடந்து தங்கள் இலக்கை அடைய வேண்டும். இது

இவர்களுக்கான இரண்டு நாள் பயணமாகும், மேல் எழுந்தவாரியான திட்டவிளக்கத்துடன் இவர்கள் தயாராகுகின்றார்கள்.

அவன் தனது துப்பாக்கியைத் தவிர சிறுகைப்பை ஒன்றையும் தோளில் இணைத்துக்கொள்கின்றான். அதனுள் சிறு இடைத்தர சத்திர சிகிச்சைக்குரிய பொருட்களும் அவசர தேவைகளுக்கான மருந்துகளும் இருக்கின்றன, களமுனைகளில் இவற்றுக்கான தேவைகள் இருக்காது என்பதே பொதுவான அனுபவம். ஆயினும் தேவை ஏற்படின் பயன்படுத்த வேண்டிவரும் என்பதனால் அவற்றை மீண்டும் ஒரு தடவை சரிபார்த்துக் கொள்கின்றான். மேற்படி ஆயத்தங்களை செய்து விட்டு நகர்ந்து கொண்டிருக்கும் போராளிகளைப் பார்த்தவண்ணம் நிற்கின்றான் வாணன்.

அவனுக்கும் அழைப்பு வர தன் அணியினருடன் சேர்ந்து கொள்கின்றான். அவர்கள் தங்களுக்குரிய பொருட்களை தூக்கிக்கொள்கின்றனர். அதற்கு முன் தம் துப்பாக்கிகளில் ரவை ஏற்றி "சேஞ் லிவரை" உறுதிப்படுத்திக்கொள்கின்றனர், தொலைத்தொடர்புக் கருவிகளை நிறுத்தியே வைத்திருந்தனர், அளவுக்கதிகமான அலைவரிசைகளை எதிரி மொனிற்றர் பண்ணுவானாகில் சந்தேகம் கொள்ளக்கூடும்.

இப்பொழுது அவர்கள் நடக்கத்தொடங்கி விட்டார்கள். அவர்களிற்கு பின்னும் முன்னுமாக கண்டிவீதியின் இருமருங்கிலும் கண்ணுக்கு எட்டிய தூரம் வரை பல நூறு போராளிகள் தெற்கு நோக்கி விரைந்த வண்ணம் உள்ளனர், மற்றவர்களிற்கு ஈடுகொடுத்து நடப்பதில் அவர்கள் சிரமத்தைச் சந்திக்க வேண்டி இருக்கின்றது. காரணம் அவர்களைப் போல் அண்மைக்காலமாக இவர்கள் கடினபயிற்சிகளை மேற்கொள்ளாமை ஒன்று, மற்றையது இவர்களிடம் மேலதிக பாரமான பொருட்கள் இருந்தமை எது எவ்வாறோ இவர்கள் அவர்களுடன் நடந்தேயாக வேண்டியிருக்கிறது.

இவர்கள் கண்டி வீதியில் கனகராயன் குளத்தைத் தாண்டியுள்ள கலைச்செல்வன் குடியிருப்பிலிருந்து நகரும் அணியுடன் இணைகின்றார்கள், சிறிது நேரத்திற்கு முன் அவ் வீதியை எதிரியின் எறிகணை மழை நனைத்திருந்தது, அதன் பிரதிபலிப்புக்களை கண்ணுற்றவண்ணம் சென்று கொண்டிருக்கிறார்கள், நல்ல காலம் இப்பொழுது எவ்வித எறிகணை வீச்சும் நடைபெறவில்லை. தற்செயலாகவேனும் இப்பொழுது ஒரு எறிகணை

விழுந்தால் போதும் அது தன் பிறவிப்பயனை நிச்சயம் அடைந்து விடும். அதாவது இவர்களில் சிலரை அது பலியெடுப்பதுடன் பலரை காயப்படுத்தவும் செய்யும்.

இரண்டு புறமும் கைவிடப்பட்ட குடிமனைகளும் வயல்வெளிகளும் பரிதாபகரமாகக் காட்சியளிக்கின்றது, வலதுபுறம் பெரிய மென்பச்சை நிறமுடைய கல்வீடொன்று செல்விழுந்து சிதைந்து, பொலிவிழந்து காணப்படுகின்றது. அருகில் இருந்த தென்னை மரங்கள் சிலமுறிந்தும் சில எரிந்தும் தமது அவலநிலையை புலப்படுத்துகின்றன. முன்னால் சென்று கொண்டிருந்த சந்திரன் சொல்கிறான் "அண்ணை இது யாழ்ப்பாணத்தைச் சேணந்த பணக்காரர் ஒருவருடைய வீடு. முந்தி ரெஸ்ட்கவுசாக இதைப் பாவிக்கிறவையள்" அவன் கூற

"எம்மவர் தம் வழமான வாழ்விழந்து பலகாலமாகிவிட்டது என எண்ணிக்கொள்கின்றான்." தொடர்ந்து கண்ணுக்கெட்டியதூரம் வரை விரிந்து வறண்டு கிடக்கும் வயல்வெளிகளும், அதனைத்தொடர்ந்து எந்தக்காலத்திலும் பசுமை மாறாதகாடுகளும் தென்படுகின்றது. இக்காடுகளில் காணப்படும் முதிரை, பாலை போன்ற வைரம்பாய்ந்த மரங்களைவெட்டி இப்பிரதேசத்தைக் கழனிகள் ஆக்க எவ்வளவு கஸ்ரப்பட்டிருப்பார்கள், என்னும் எண்ணம், ஏக்கம் ஒன்றை அவ்வூர் ஏற்படுத்துகின்றது.

குடியேற்றத்திட்டத்திற்குரிய குடிசைவீடுகள் உடைந்தும், சோபையிழந்தும் காணப்படுகின்றன, வளமிக்கவன்னிமண் எதிரியின் ஆக்கிரமிப்பை எதிர்பார்த்து தன் ஜீவிதத்தை இழந்துநிற்கின்றது. மரக்கொப்பில் காற்று உரசியதால் ஏற்பட்டசத்தம் சாதாரணகாலமாயின் கீதமாக இருந்திருக்கும். ஏனோ அது இப்பொழுது இங்கிருந்து இடம்பெயர்ந்தமக்களின் மன உளைச்சலை வெளிப்படுத்தும் ஊளைச்சத்தமாகவே மனதில் படுகின்றது.

இம்மண் மண்டியிடக்கூடாது என்பதற்காகத்தான் இவர்கள் இப்பொழுது அணிவகுத்து செல்கின்றார்கள், இது இம்மரங்களிற்கும் விளங்கியதுபோலும் காற்றசைவில் தம்மில் பூத்திருக்கும் சிறியமலர்களை இவர்கள்மீது தூவி வாழ்த்துகின்றன. அருகே வளர்ந்திருக்கும் புற்கள் அலைவடிவில் அசைந்து அவர்களை ஆராத்தி எடுக்கின்றன. வீதியோர மர நிழல்களைத் தாண்டிவரும்போது சூரியதேவன் எட்டித்தன் கிரகணங்களினால் இவன்

வலக்கன்னத்தில் முத்தமழைபொழிகின்றான். அதுசற்றுச் சூடாகவும், இதமாகவும் இருப்பது போல் உணர்ந்ததால் கன்னத்தை ஒருமுறைதடவி தன்னுள் எதையோ எண்ணி புன்சிரிப்பொன்றை உதிர்க்கின்றான், இவனை கவனிக்கும் எவரும் "இவன் என்ன தன்பாட்டில் சிரிக்கின்றான்" பழையமண்டைப்பீசோ! என எண்ணிவிடுவார்கள் என நினைத்து முகத்தைத் தாழ்த்திக்கொள்கின்றான்.

அப்பொழுது காலடி ஓசைடி ஒன்று விரைவாக இவனை அண்மிப்பதையும், வலப்பக்கமாக இவனை விலத்த முனைவதையும் உணர்ந்து கடைக்கண்ணால் அவதானிக்கின்றான். ஆச்சரியம் இவனிலும் வயது குறைந்த பெண்போராளி ஒருவர் பெங்களூர் டோபிடோவை தோளில் உழவர் மண்வெட்டி கொண்டுசெல்வதுபோல் சுமந்தவண்ணம் விலத்திமுன்னால் விரைந்து செல்கின்றாள். ஏனோ இவனுடல் சற்று சங்கடத்தில் நெளிகின்றது. இவனிலும் குறைந்தது எட்டுவயதாவது இளையவள் ஆக இருப்பாள், இவள் எதிரியின் தடையை உடைத்து மற்றவர்களுக்குப்பாதை எடுத்துக்கொடுக்கப்போகின்றாள், அதனூடாக ஏனையபோராளிகள் பாய்ந்து எதிர்முகாமினுள் ஊடுருவி தாக்குதல் நடத்தப்போகின்றார்கள், சிலவேளைகளில் டோபிடோவை முட்கம்பி வேலிக்கு அருகில் கொண்டு செல்லும்போது குண்டடிபட்டு இவள் இறக்கலாம். அல்லது இவள் இதனை வெடிக்கவைத்தவுடன் அவ்விடம் நோக்கி செறிவாக்கப்படும் ரவை மழையினாலோ அன்றி சிறுரக பீரங்கிவீச்சுக்களினாலோ சின்னாபின்னமாகிப் போகலாம், எதுவும் நிகழலாம். மனம் கனக்கின்றது

"இவள் வயசில் நான் என்ன செய்து கொண்டிருந்தனான்" நினைத்து வெட்கப்படுகின்றான். சைக்கிளின்ற ரயர் தேயத்தேய யாழ்ப்பாண வீதிகளை வலம் வந்ததுதான் மிச்சம், நல்லவேளை காலம் பிந்தியாவது ஞானம் பிறந்தது. தனக்குத்தானே சமாதானம் செய்து கொள்கின்றான்.

இன்னும் எத்தனை இளைஞர்கள், யுவதிகள் தங்கள் பொறுப்பை உணராமல் பரப்புரை செய்பவர்களுக்கு.... எனக்கேன் இதுவென தன்மனவோட்டத்தை திசைமாற்ற முயற்சிக்கின்றான், அப்பொழுது முன்னால் சென்ற போராளி சற்றுநின்று திரும்பிப்பார்த்து ஒரு புன்னகை பூத்து ' "அண்ணை போயிட்டுவாறன்" கூறியவள் அவன் விடையையும் எதிர்பாராமல் விறுவிறுவென நடக்கத்தொடங்கினாள். தன்கண்கள் பனித்துவிடுமோ என பயப்படவேண்டியதாகிவிட்டது தன்னை ஒருமாதிரி கட்டுப்படுத்திக்கொள்கின்றான்.

உணர்வுகளால் உருப்போடப்பட்டவன்தான் போராளி. ஆனால் அவன் அவற்றால் அள்ளுண்டுபோதல் ஆகாது. ஏனெனில் தன் கடமைகளை அவன் சரிவரச்செய்ய முடியாமல் போய்விடலாம். என எண்ணும்போது முன்னோர் சொல்வார்கள், "தம்பியுள்ளான் சண்டைக்கஞ்சான்' என இனி மாற்றித்தான் சொல்லவேண்டும் அண்ணன் உள்ளவள் சண்டைக்கு அஞ்சாள். எனும் சொற்றொடரை உதடுகள் முணுமுணுக்கின்றது.

அரைமணித்தியாலம் நடந்திருப்பார்கள் தாகம் இவர்களை வாட்டத்தொடங்கிவிட்டது. தண்ணீர்க்கானைத்திறந்து குடிப்போமென நினைக்க, முன்னால் சென்றுகொண்டிருந்த சந்திரன் சொல்கிறான் "அண்ணா" அவசரப்பட்டு தண்ணீரை குடித்து முடித்துப்போடாதீர்கள். இங்கனேக்க குடிமனைகள் இருக்கும். பார்த்துக்குடிக்கலாம். இங்கால காட்டுக்கை நடக்கேக்கதான் முக்கியம் தேவைப்படும், சாப்பாட்டிற்குப்பிறகும் கஸ்ரப்பட வேண்டியிருக்கும். அவனது தொனியில் அனுபவம் பேசுகிறது. இவனுக்கு ஏமாற்றமாக இருந்தது. ஆள்சொன்னபிறகும் குடிக்கிறது சரியில்லை என நினைத்து தன் திட்டத்தை கைவிடுகிறான்.

என்ன அண்ணை பேசாமல்வாறியள் ஏதும் கதையுங்களன். சந்திரன் இவனை தூண்டினான். மச்சான் சந்தோசமாக இருக்கு பலகாலமாக எதிர்பார்த்திருந்த சந்தர்ப்பம் இப்பதான் கிடைச்சிருக்கு "எனமட்டும் கூறினான்." போராளிகள் நெருக்கமாக பழகும் சந்தர்ப்பங்களில் அவர்கள் மச்சான்..... டே மச்சான் என அழைப்பது வழக்கமாகி இருந்தது. "அண்ணை நான் ஒன்று சொல்லுவன் செய்வியளே?' நின்று நிதானித்து இவனை திரும்பி இவன் கண்ணோடு தன் கண்கலக்கவிட்டுக்கேட்கின்றான். தன் புருவங்களை மட்டுமே மேலுயர்த்தி என்ன? என கண்களால் வினாவுகின்றான். "நான் செத்தால் எனக்கொரு கவிதை எழுதிப் போடுங்கோ" அவன்கூற இவனுக்கு பகீர் என்றிருந்தது.

இப்படித்தான் தொண்ணூற்று மூன்றில் நவநீதன் வன்னிக்கு லீவில் வந்திருந்தான். அவனையும் ஏனையபோராளிகளையும் வழியனுப்ப இவனும் கிளாலிக்கரைவரை வந்துநின்றவன். அப்போது நவநீதன் இப்படித்தான் சொன்னான். அதேமாதிரி அவன் லீவில் நிற்கும் போது மாவீரர் நிகழ்வொன்றிற்குச் சென்றிருந்த பொழுது விமானக்குண்டுவீச்சில் மேஜர் மூர்த்தி மாஸ்ட்டருடன் வீரமரணம் அடைந்து விட்டான். லீவு முடிந்து திரும்பிய ஏனைய போராளிகள்

அவனின் நினைவுகளையே சுமந்துவந்து அவனிடம் கூறினா். பின்னா் கல்லூரியில் வெளியிடப்பட்ட ஆண்டுமலருக்காக 2ம் லெப் நவநீதனைப்பற்றி ஒரு கவிதை எழுதிக்கொடுத்தான், சந்திரன் இப்படிக்கூற இவனுக்கு பழசு ஞாபகம் வர பெரிய சங்கடமாகப் போய்விட்டது.

“மங்கலகரமான நேரங்களில் அமங்கலமானவார்த்தைகளை கதைக்கக்கூடாதாம்” கண்ணதாசனின் அர்த்தமுள்ள இந்துமதம் ஞாபகத்திற்கு வர “அப்படி ஒன்றும் நடக்காது நாங்கள் எல்லோரும் இச்சண்டையை வென்று மீண்டும் சந்திப்போம்” என்று கூறினான். இப்பொழுது சந்திரன் இவனைப்பார்த்து சிரித்தான். “என்னண்ணை யதார்த்தத்திற்கு புறம்பாகக்கதைக்கிறியள் யுத்தத்தில் அப்படியும் நடக்குமே!” என இவனை அவன் அச்சிரிப்பினூடு கேட்பதுபோல் உணர்கிறான்.

“நீ எதை நினைக்கிறாயோ அதாய் ஆவாய்” சின்னனில் சமயப்பாடப்புத்தகத்தில் இருந்த வசனமும் மனதில் எட்டிப்பார்க்கின்றது.

புளியங்குளச்சந்திக்கு சற்று முன்பாக பிரதான வீதியில் இருந்து விலகி கிழக்குநோக்கி வயல்வெளிகளினுள் இறங்கி நடக்கின்றார்கள். அவர்கள் போகும்பாதை ஏற்கனவே அமைக்கப்பட்டிருந்த நகரும் பதுங்குகுழிகளிற்கு சமாந்தரமாகச் சென்றுகொண்டிருக்கிறது, அதன் மறுபக்கம் நிலக்கீழ்காவலரண்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அக்காவலரண்களில் நின்ற ஆண், பெண் போராளிகள் வெளியில்வந்து

“வாருங்கள்” என வாழ்த்தி அனுப்பிக் கொண்டிருக்கிறார்கள். இவர்களும் “போயிற்றுவாறம்” எனக்கூறியபடியே வயல்வரம்புகளையும் சிறுபற்றைகளையும் கடந்து செல்கின்றார்கள்.

வானம் நிர்மலமானதாக இருக்கின்றது, சூரியக்கதிர்கள் முதுகைப்பதம்பார்க்கின்றன. காலை அல்லது மாலை வெய்யில் தேகத்தில் பட்டால் நல்லதாம் தோல் அதன் உதவியுடன் விற் - Dஐ தொகுக்குமாம், எல்லாம் நன்மைக்கே” மனம் சூழ்நிலையை தனக்குச்சார்பாக எண்ண எத்தணிக்கின்றது.

வியர்வை ரவைதாங்கியை நனைக்கத்தொடங்கிவிட்டது, தாகமும் வேர்வைக்கு நேர்விகித சமனாய் தொண்டையை வறட்டுகின்றது, கொஞ்சத்தூரம் நடக்கவே இப்படியென்றால் இன்னும் பல மடங்குதூரம் நடக்கஇருக்கிறதே எண்ணும்போது பயம்பற்றிக்கொள்கின்றது.

எப்படியும் நடக்கத்தானேவேணும் உலகின் தலைசிறந்த போராட்டவீரர்கள் எல்லாம், அதாவது பாரிய இராணுவ வெற்றியைப்பெற்றவர்கள் எல்லாம் பல ஆயிரம்மைல்களை நடந்து, கடந்தவர்களாகவே இருக்கின்றனர். உதாரணமாக மா. ஒ சேதுங் 12500 கி.மீ தூரம் நடந்தவர். சேகுவேராவும் நடந்துநடந்தே போராட்டம் நடத்தியவர், ஏன் இந்திய இராணுவகாலகட்டத்தில் தலைவர் ஈறாக இன்று களமுனைகளை வழி நடத்தும் மூத்த தளபதிகள் வரை அனைவரும் கால் நடையாகவே தங்கள் பயணங்களை மேற்கொண்டனர். யாழ்மாவட்டத்தில் இருந்து மணலாற்றிற்கும் மணலாற்றில் இருந்து ஏனைய மாவட்டங்களிற்குமென உணவுப்பொருட்கள், செய்திகள் என்பனகொண்டு செல்ல 'நடராசா' வாகனத்தையே பயன்படுத்தினர். உழவு இயந்திரத்தில் போகவெளிக்கிட்டு இந்தியஇராணுவத்திடம் 'கால்கஸ்ரோ' அடிவாங்கினவையும் உண்டு. தனக்குத்தானே சொல்லிக்கொள்கின்றான். முன்னர் வரலாற்றை வென்றவர்களும் இப்பொழுது வரலாற்றை வென்றுகொண்டு இருப்பவர்களும் நடந்தவண்ணமே உள்ளனர்.

காவலரனில் நின்றபோராளிகளிடம் நீர் வேண்டிக்குடிக்கிறார்கள், அவசரத்தில் முகத்தில் ஊற்றப்பட்ட நீர் நாசித்துவாரத்தினுள் புகுந்து இம்சைசெய்தது, மார்பைநனைத்து குளிரூட்டியது. எல்லாம் மகிழ்ச்சியாகவே இருக்கின்றது, திடீரென பாரிய வெடிச்சத்தங்கள் கேட்டன. அவை ஆட்லறி எறிகணைகள் ஏவப்படும் போது ஏற்படுவது என்பதை ஊகிக்கக் கூடியதாக இருந்தது. அவ் எறிகணைகள் அவர்களிற்கு மேலால் ஆகாயத்தில் காற்றை உஸ்... என கிழித்துச்செல்வது கேட்டது, அவர்களின் செவிகள் அருகில்விழும் எறிகணைகள் காற்றில் ஏற்படுத்தும் சத்தத்திற்கும் அதிக தூரம் சென்று விழும் எறிகணைகளின் சத்தத்திற்கும் இடையே வேறுபாட்டை பிரித்தறியக்கூடியதாக பழக்கப்பட்டுவிட்டன இதனால் எவ்வித பரபரப்புமின்றி பயணத்தை தொடர்கின்றார்கள்.

இப்பொழுது இவர்கள் நெடுங்கேணியில் இருந்து புளியங்குளம் சந்திக்குவரும் வீதியைக் கடந்து கொண்டிருக்கின்றார்கள். இவர்கள் வீதியை

ஊடறுக்கும்போது இவர்களில் இருந்து எதிரி மூன்று கி.மீ தொலைவில் நிற்கின்றான். அதாவது கனகராயன் ஆறு நெடுங்கேணிவீதியை குறுக்கறுக்கும் இடத்தில் இன்றுகாலை அவ்விடத்தில் இருந்து புளியங்குளச்சந்திவரை முன்னேற முயற்சித்த இராணுவத்துடன் பாதுகாப்பு அணியினர் பாரியமோதலில் ஈடுபட்டனர். இதனால் சிலர் வீரமரணமடைய பலர் காயமடைந்தனர். இராணுவத்தின் முயற்சி முறியடிக்கப்பட்டது, அப்பிரதேசத்தினூடாகவேஇப்பொழுது நகர்ந்துகொண்டிருக்கின்றார்கள்.

இவர்களை உட்செல்லவிட்டு எதிரி நாளையோ அன்றி மறுதினமோ முன்னேறி புளியங்குளச்சந்தியை கைப்பற்றுவானாகில் இவர்கள்பாடு திண்டாட்டம் ஆகிவிடும் பின் இவர்கள் வெளிவருவதற்கென்றேயொரு தாக்குதல் நடத்தவேண்டிவரும், எது எவ்வாறாயினும் இப்படியானவொரு நகர்வை எதிரி இப்பொழுது எதிர்பார்க்கமாட்டான், "கட்டவுட்டுடன்" தொடர்புகொண்டவண்ணம் பயணத்தை தொடர்கின்றார்கள்.

பாதையிலிருந்து மீண்டும் வயல்வெளியினுள் இறங்குகின்றார்கள். வயல்கள் உழுதவண்ணமே காய்ந்து இறுகி இருந்ததால் பள்ளமும், பிட்டியும் கரடுமுரடும் ஆனதாகவும் காணப்படுகின்றது.

"டொக்ரர்" எங்கோ கேட்ட குரலொன்று செவியினுள் புக குரல்வந்ததிசைக்கு திரும்புகின்றான். மிகவும் ஆச்சரியமாக இருந்தது. ஏற்கனவே காயமடைந்ததால் என்னவோ சற்று கட்டையாக இருந்தகாலை இழுத்திழுத்து மிகவேகமாக நடந்து இவனருகில் வந்தான் சிட்டு. தமிழீழத்தின் தலைசிறந்த பாடகன் இவன். கையைப்பிடித்தவண்ணம் நடந்துவருகின்றான். இருவருடையேயும் நெருங்கியநட்பு என்று எதுவுமில்லை. பாடல்கள் பதிவுசெய்யப்படும்போது ஒலிப்பதிவுக்கூடத்தில் இவனும் இருந்து பார்த்துக் கொண்டிருப்பான். அப்பொழுது ஏற்பட்டபழக்கந்தான், சிட்டு காவும்குழு ஒன்றிற்கு பொறுப்பாகவந்திருந்தான். களமுனையிலிருந்து காயமடைந்த போராளிகள் முதல் கைப்பற்றப்படும் ஆயுதங்கள்வரை அப்புறப்படுத்துவதிலிருந்து, களமுனைக்கான விநியோகங்களை உடனுக்குடன் மேற்கொள்வதும் இவர்களின் பணியாகும். தேவையேற்படும் பட்சத்தில் சமராடவேண்டியும் வரும். அப்பொழுது இவர்களை காவப்படவேண்டியவர்களாக மாறுவதும் அடிக்கடி நடப்பதுதான்.

மைக்கை கையில் வைத்திருக்கும் அவன் தோற்றத்திற்கும் இப்பொழுது வோக்கியுடன் நிற்கும் போர்க்கோலத்திற்கும் இடையே உள்ள வேற்றுமைகளை ஆராயமுற்படுகின்றான்.

"என்ன டொக்ரர் விழுங்கிறமாதிரி பார்க்கிறியள்?" "ஒன்றுமில்லை சும்மா பார்த்தனான்" ஏதோ கதைக்கவேணும் என்பதற்காக கதைக்கிறான்

"நான் காயப்பட்டுவந்தால் வடிவாக கவனிப்பீங்கள்தானே!" எனக்கேட்டவன் தொடர்கிறான்

"இப்ப நீங்கள் எதுவும் எழுதுறதில்லையா? ஏதாவது எழுதுங்களேன்". திடீரென இவன் இப்படிகூற இவன்மனதை பாரமொன்று அழுத்துகின்றது. ஐந்துவருடங்களிற்கு பின்னோக்கி பயணிக்கின்றான்.

இவர்கள் பயிற்சிப்பாசறையில் புடம்போடப்பட்டுக்கொண்டிருந்தார்கள் அப்பொழுது ஒருநாள் சர்மா கூறினான் "மச்சான் நீ ஏதாவது எழுதலாந்தானே" ... அதற்கு இவன் பகிடியாகக் கூறினான்

"நீ முதல் சா, உனக்கு விழுதுகள் எழுதிறன்" துர்அதிஸ்டம் பகிடியாகக் கூறியது உண்மையாகவே நடந்துவிட்டது. தொடர்ந்து பலசண்டைகளில் பங்கேற்றவன் தன்திறமைகளை உரியமுறையில் வெளிக்காட்டியதனால் ஆர்.பி. ஜீ கொமாண்டோஸ் பயிற்சிக்கு தேர்ந்தெடுக்கப்பட்டான். சண்டமாருதம் எனும் இராணுவநடவடிக்கை ஒன்றை தெல்லிப்பளையூடாக எதிரி ஆரம்பித்திருந்தான். அதில் பங்குபற்றி இராணுவ ராங்ஒன்றை தனது ஆர்.பி.ஜி கணைகளினால் தாக்கியழித்தான். பின்னர் 'பல்வேகய' எனும் பெயரில் மேற்கொள்ளப்பட்ட இராணுவ நடவடிக்கையில் வீரமரணமடைந்தான். பின் லெப் மணிமாறனாகிய அவனுக்கு 'விழுதுகள்' எழுதவேண்டிவந்தது. இப்பொழுதென்னவென்றால் இவன் கேட்கிறான், பழையஞாபகம் மனதை அழுத்த தொண்டைக்குழிமேலேறி இறங்குகின்றது.

"என்ன கதைக்காமல் வாறீங்கள்?" மீண்டும் சிட்டு கேட்க மனதில் ஓடிய எண்ணங்களை வெளிப்படுத்தமால், எப்படிப்போகுது உங்கள் பாடு.....? ஜெயசிக்குறு செமமாய்த்தான் வாட்டுதுபோல ....? எனக்கேட்கிறான்" "டொக்ரர் நான் இப்பத்தான் ஒரு மனத்திருப்த்தியை பீல் பண்ணுறன் எனக்கூறுகின்றான்"

முகத்தில் எவ்வித உணர்வுகளையும் வெளிப்படுத்தாமல் அதற்கு இவன் கேட்கிறான் "ஏன் முதலில் அப்படி பீல்பண்ணவில்லையா?" இல்லை டொக்ரர் அப்பமகிழ்ச்சியாகத்தான் இருக்கும், பல்லாயிரம் மக்கள் முன்னிலையில் பலவகை இசைக்கருவிகளுடன் இசைந்து பாடேக்க நல்லாத்தான் இருக்கிறது. ஆனால்.... "என இழுக்கின்றான்" "ஆனால்....." இப்ப எங்கட போராளிகளோட பாடேக்க அதிலும் நல்லா இருக்கு. நாங்கள் எல்லாம் கஸ்ரப்பட்டுக்களைத்துப்போய் இருக்கும்போது மற்றவர்கள் என்னை பாடச்சொல்லிக்கேட்பார்கள். நான் எந்த இசைக்கருவிகளும் இல்லாமல் சதாரணமாகப்பாடுவேன். அதை எல்லோரும் ரசிப்பதைப் பார்க்கும் போதுப் உண்மையில் திருப்தியை உணருகின்றேன். இப்படி அவன் சொல்ல இவனுக்கு தலைவர் சொன்னது ஞாபகம் வந்தது. வழமைமாதிரி எல்லோரும் சண்டைக்குப் போவதை விரும்புவார்கள் என்பதை எண்ணியதால் என்னவோ தலைவர் ஒருக்காச்சொன்னவர்.

"நான் இப்ப சொல்லுறன் வேணுமென்றால் டயறியில் குறித்துவையுங்கள் இப்பொழுது பல்லைக்கடித்துக்கொண்டு படியுங்கள் பின்னர உங்களால் ஒவ்வொரு போராளியும் காப்பாற்றப்படும் போது நீங்கள் நூறு 'பீல்டுக்கு' போன மனத்திருப்தியை அடைவீர்கள்"

ஆம் ஒவ்வொரு போராளியும் தான் இயக்கத்திற்கு ஏதோ ஒருவகையில் பயன்படுகின்றான் என உணரும்போதே உற்சாகமடைகின்றான். இவன் இவ்வாறு யோசித்துக்கொண்டிருக்கும்பொழுது சிட்டு சொல்கிறான்

"எனக்கு இப்படி ஒருசந்தர்ப்பத்தை ஏற்படுத்தி தந்ததற்காக இராணுவத்திற்குத்தான் நன்றி கூறவேண்டும்." இவ்வளவு நேரமும் 'சீரியசாகக்' கதைத்துக்கொண்டுவந்தவன் முகத்தில் இப்பொழுது ஒரு சிரிப்பு உருவாகின்றது. கறுத்த அவன் முகத்திற்கு வெண்பற்கள் வெளிச்சம் ஒன்றை கொடுப்பது போல் இருக்கின்றது. இவர்களின் இதயங்களும் இவ்வாறுதான் முழுமையாக செயலுடன் பார்க்கும்போது இரும்பாயும், உணர்வுகளுடன் பார்க்கும்போது வெண்மையாகவும் இருக்கும்.

"டொக்ரர் நாங்கள் இதை எதிர்பார்த்தனாங்கள். ஆதலால் தானே பரப்புரையை முடக்கிவிட்டனாங்கள். ஆனால் டொக்ரர் ஒருவிசயம் நான் பரப்புரையில் நிற்கும்போது இயக்கத்தில் சேர்ந்தகனபேர் இப்ப குறுப்லீடேசா

எல்லாம் இருக்கிறாங்கள். அவன் தொனியில் ஒருபெருமிதம் தெரிகின்றது. ரத்வத்தை சொல்கின்றான் இதுதான் இறுதிப்போர் என்று ஆனால் இவனுக்கு விளங்கவில்லை இப்பதான் ஆரம்பம் என்று" இதனைக்கூறியசிட்டுவின் குரலில் ஏளனம் தொனித்ததா அன்றி எம் வெற்றியின் உறுதி தொனித்ததா என விளங்கவில்லை "எதைவைத்து இப்படி கூறுகின்றீர்கள்" என அவன்கேட்க "பிறகென்ன ஏற்கனவே இரண்டுதரம் முறையாய்ப்போட்டிட்டம். இதுமூன்றாம் தரம் பதினைந்துமைல் மூவ் பண்ணுறதுக்குள்ளாகவே இப்படியென்றால் மிச்சம் எப்படி இருக்குமென்று கட்டாயம் யோசிப்பான். அவன் முடிக்க" அதனால்..." என இவன் தொடர்ந்து அவன் கதைப்பதற்கு உட்சாகமூட்டுகிறான் "பிறகென்ன சைக்கோலஜிக்கலா ஆள் குழம்பிவிடுவான். பிறகு எங்கட ஒவ்வொரு சின்ன அடியுமே அவனுக்கு பெரிசாத்தான் தெரியும் தன்ர நிம்மதியை அவன் வன்னிமண்ணிலதான் தொலைக்கப்போறான்." அவனின் குரலில் உறுதிதென்படுகின்றது.



"நாங்கள் இப்ப சந்திக்கிறது ஆட்பற்றாக்குறையே அதுதான் இப்ப லிமிற்றிங்பக்ரர். அவனுக்கும் அது தான் பிரச்சனை. இன்னும் சில ஆயிரம்

போராளிகள் இருந்தால்போதும். நாங்கள் எங்கட இலக்கை கெதியா அடைந்திடலாம். " ஏனோ அவனின் குரலில் கவலை தெரிகின்றது. எங்கள் இளையதலைமுறையில் இன்னும் பலர் இதனை உணரவில்லை என்பதை அவன் முகக்குறியே உணர்த்துவதுபோல் இருக்கின்றது. "டொக்ரர் " எங்கடசகல வளங்களையும் ஒருமுகப்படுத்தியேனும் இந்த ஜெயசிக்குறுவமுறியடிக்கவேனும். இதில் பெறப்போகும் வெற்றிதான் தமழீழத்தின்ரமட்டுமல்ல உலகத்தமிழன்ரை தலைவிதியையும் தன்மானத்தையும் தீர்மானிக்கப்போகின்றது" யதார்த்தமான உண்மைகளைச் சாதாரணமாக கதைத்துக்கொண்டு வருகிறான்.

"மா,ஒசேதுங்" ஒரு இடத்தில் சொல்லி இருக்கிறார். ஒரு சண்டையில் பெறுகின்ற வெற்றியோ தோல்வியோ எதுவாயினும் அது அதனைத்தொடரும் பல சண்டைகளில் செல்வாக்கு செலுத்தும். இவன் நல்லாத்தான் புத்தங்கள் வாசித்திருக்கின்றான் போலும் மனம் சாடையாக பொறாமை கொள்கின்றது. இவனை கவனிக்காமலே அவன் தொடர்கின்றான் "வன்னியில் காலைவைத்தவனுக்கு என்ன நடக்குமென விளங்கத்தானே வேணும்" "அப்ப டொக்டர் நான் வாறன் " இவன் கையைப்பிடித்து இறுக்கியவன் சற்று பின்தங்கி தனது அணியுடன் இணைந்துகொள்கின்றான். இவன் சற்று எட்டப்போய்விட்ட தன் அணியினரைப்பிடிப்பதற்காக விரைந்து நடக்கின்றான்.

இப்பொழுது பழையவாடி வீதியை அடைந்துவிட்டார்கள். வீதியில்நடப்பது சற்று இலகுவாக இருக்கின்றது. ஆனால் இருமருங்கிலும் இருக்கும் வீடுகளை பார்க்கும்போதுதான் மனம் கவலைப்படுகின்றது. சிறியகல்வீடுகள்தான் ஆனால் அவற்றின் முற்றங்களை அலங்கரிக்க நாட்டப்பட்டிருந்த பூக்கண்டுகள் தண்ணீருக்காய் தவமிருந்து வாடிக்கிடக்கின்றன. கிணற்றடியில் நின்றவாழைகள் தங்களின் இறுதிக்காலத்தை கவனமாக கழிப்பதுபோல் இருக்கின்றது. காற்றுக்கூட அவைகளின் நிலமை விளங்கி அதிகம் அல்லல்படுத்த தயங்குகிறது. குருத்திற்குபக்கத்தில் இருக்கும் இளையஇலைகள் கூட சீப்புருவாக கிழிந்து மெல்லிய அசைவைக்காட்டுகின்றன. எலுமிச்சை மரங்களில் பச்சையும், இளமஞ்சலுமாக காய்கள் நிறைந்து காணப்படுகின்றன. ஆனால் அவற்றின் அளவோ மிகவும் சிறியதாகத்தான் காணப்படுகின்றது. சில தென்னை மரங்கள் மட்டுமே நிறையதேங்காய்களைத்தாங்கியவண்ணம் எக்காலத்திலும் நாம் எம் கடமையில் இருந்து விலகோம் என்பதுபோல் காட்சியளிக்கின்றன. இவற்றை உருவாக்க

இம்மக்கள் எவ்வளவு கடினப்பட்டிருப்பார்கள். நிலக்கீழ் நீருடன் தம் நெற்றிவேர்வையையும் சேர்த்தல்லவோ ஊற்றி இருப்பார்கள். இப்பொழுது அவர்கள் நிலைமை.... தொடரும் எண்ணங்களை பாலையடி பள்ளிக்கூடம் திசைமாற்றுகிறது.

நாங்கள் சின்னனில் படிக்கின்றபோது இனவாதத்தின் கோரப்பற்கள் பதியத்தொடங்கிவிட்டனதான். ஆனாலும் எவ்வளவு சந்தோசமாக இருந்தனாங்கள். எல்லோருமாக சுற்றுலாசெல்வோம். சுப்பிரமணியம் பூங்கா காங்கேசந்துறை சீமேந்து தொழிற்சாலை காரைநகர் சீனோ.. ஒவ்வொரு இடமாக செல்ல ரீச்சர்மார் விளங்கப்படுத்துவினம். யாழப்பாணம் றீகல் தியட்டரில் 'யங்கிள்புக்' படம் பார்த்தோம். முற்ற வெளியில் ஐஸ்கிறீம் வேண்டிக் குடித்தோம். மாலை நேரம் உடல்வருட குளிரான ஐஸ்கிறீம் தொண்டையினுள் இறங்க அப்பப்பா உடல் சிலிர்க்கும். ஆனந்தம், இப்படியெல்லாம் வாழ்ந்துவிட்டுத்தான் இயக்கத்திற்கு வந்தனான். ஆனால் இப்பள்ளியில் படித்துக்கொண்டிருந்த பிள்ளைகள் எங்கே....?

உண்ண உணவின்றி உடுத்தஉடையின்றி, நிம்மதியாக படுத்தெழும்ப இடமின்றி, எவ்வளவு அல்லல்படுங்கள், மழையிலும் வெயிலிலும் வாடும் அவர்களிற்கு நுளம்புகள்கூட இரக்கம் காட்டுவதில்லைத்தானே பாவம் நீங்கள். பல விதமாக ஓடியமனம் அவர்களிற்காக பரிதாபப்படுகின்றது. இன்னும் கொஞ்சக்காலம் பொறுங்கள் உங்களின் பிஞ்சுப்பாதங்களை இப்பள்ளிக்கூடம் தரிசிக்கும். இவன் மனத்தினுள்ளே அவர்களுக்கு உறுதி கூறுகின்றான்.

களைத்துப்போன இருபோராளிகள் தாங்கள் கொண்டுவந்திருந்த பொருட்களை ஒரு ஸ்ரெச்சரில்வைத்து தோளில் சுமந்தவண்ணம் செல்கின்றனர். "என்ன இப்பவே காயக்காரரை தூக்க ஒத்திசை பாக்கிறீர்களோ?" அருகில் ஒருபோராளி கேட்க

"அதுக்கெண்டே கனகாலம் றெயினிங் எடுத்தனாங்கள்." இருவரில் முன்னால் சென்றவன் பதிலளிக்கின்றான். ஆம் களமுனையில் நடைமுறைப்படுத்தப்படும் ஒவ்வொரு செயற்பாட்டிற்குமே பயிற்சிகள் செய்யப்படுகின்றன "கடினபயிற்சி இலகுவான சண்டை" அண்ணை சொல்லியிருந்தவசனம் பலமுறை நடைமுறை உண்மையாகவே உணரப்பட்டுள்ளது.

இப்பொழுது பழையவாடி பாதையில் இருந்து, இறங்கி கண்டிவீதிக்கு சமாந்தரமாக காட்டுப்பாதை ஒன்றினூடு நடக்கின்றார்கள். நேரம் இனியமாலைப்பொழுதாக இருக்கின்றது. சூரியன் மேற்கின் தொடுவானத்தை அண்மித்திருப்பான் நேரடியாக..... பார்க்கமுடியாது ஏனெனில் இரண்டு பக்கமும் வளர்ந்துள்ள 30-40 அடி வரை உயரமான காட்டுமரங்கள் தங்களினுள் சூரியக்கதிரை ஊடுருவவிடுவதில்லை எனக்கங்கணம் கட்டிய வைபோல் தம்கிளைகள் எனும் கரங்களை ஒன்றுடன் ஒன்று நெருக்கமாகவே வைத்திருக்கின்றன. இந்திய இராணுவக்காலகட்டத்தில் அண்ணையை சந்திக்கிறதிற்காக இந்தியாவில் இருந்து இங்கே வந்திருந்த திரு கோபாலசாமி கூறியிருந்தது. ஞாபகத்திற்குவந்தது.

நான் சூரிய ஒளி புகமுடியாத காடுகளினூடாக அழைத்துச்செல்லப்பட்டேன். தெரியவில்லை காலநிலை இதமாக இருந்தாலும் கால்களைத்தான் அரக்கன் பிடித்து கடித்து உண்பதுபோல் இருக்கிறது. ஒவ்வொரு அடி எடுத்து வைப்பதும் பரமபிரயத்தனமாகவே இருக்கிறது. ஆயினும் அதனை வெளிக்காட்ட முடியாது, வழமையான வரட்டுக்கௌரவப்பிரச்சனைதான். சுமார் 11/2 கி.மீ தூரம் நடந்திருப்பார்கள் போகும்பாதைக்கு குறுக்கே ஒரு பெரியபாலைமரம் விழுந்துகிடக்கிறது. அதன் இலைகள் உதிர்ந்திருக்கும் பதத்தை பார்க்கும்போது சுமார் இரண்டுகிழமைக்குமுன் வீழ்ந்திருக்கவேண்டும். சாதாரணமாக ஒருமரம் இப்படி விழுந்திருக்காது. அதுவும் நிலத்திலிருந்து இரண்டு அடி மேலாக குறுக்காக முறிந்துள்ளது. யானையாலும் இந்த மரத்தை முறித்து வீழ்த்தமுடியாது. இப்படிமரத்தை முறித்துவீழ்த்தக்கூடிய புயல்காற்று என்றும் இப்பிரதேசங்களில் வீசுவதில்லை.

இவன் பலவாறு சிந்திக்கின்றான். முன்னால் சென்றுகொண்டிருந்த சந்திரன் நின்றுதிரும்பி இவன் முகத்தைப்பார்க்கிறான். இவன் மனதில் ஓடிய எண்ணங்களை விளங்கியதனால் என்னவோ சற்று நின்று “இந்தஇடத்தில் என்னநடந்தது தெரியுமா? ” கேட்கிறான். இவன் தெரியாது என்பதனை தலையசைப்பின்மூலம் தெரிவிக்கின்றான். சந்திரன் அந்தச்சம்பவத்தை விபரிக்க தொடங்குகின்றான்.

“சுமார் இரண்டு கிழமைக்கு முன்னால் இதில் ஒரு அம்புஸ் நடந்தது. என்னமாதிரியெண்டு தெரியுமா? கேட்ட சந்திரன் பதிலை எதிர்பார்க்காமலேயே தொடர்கிறான். “யங்கிள் கொமான்டோஸ் என்று அவனில் ஒரு பிரிவு

இருக்குது, அவங்களுக்கு காடுகளுக்குள் வந்து எங்கட ஆக்களுக்கு அம்புஸ் கொடுக்கிறதுதான் வேலை. ஒரு நாள் இந்த வீதியை மேற்கில் இருந்து கிழக்காக் கடந்து, கொஞ்சத்தூரம் கிளியர் பண்ணிப்போட்டு படுத்திட்டாங்கள் என்னமாதிரியெண்டா.... சிறிது நிதானித்தவன் தொடர்கிறான். இந்தா விழுந்து கிடக்கிறதே பாலமரம், இதன் அடியில் கோடக்ஸ் சுத்தி வெடிக்கும்போது சரியாக வீதிக்குக் குறுக்கே விழவேணும், இப்ப விழுந்துகிடக்கிறமாதிரி. இதில ஒன்றைக் கவனிக்கவேண்டும். தட்டித்தவறி எதிர்ப்பக்கம் விழுந்தால் எல்லாம் குழம்பிப்போயிடும், அதுக்கேற்ற மாதிரி கோடெக்ஸ்சப் பொருத்திப்போட்டு 02 கிளைமோரையும் வைச்சுப்போட்டு பொய்சனில் இருந்திட்டாங்கள். எங்கடயள் தெரியாதே" எனக்கூற முனைந்தவன், தங்களைத் தாங்களே குறைத்துக்கருதுகின்றோமே என எண்ணியதால் என்னவோ அதனை முடிக்காமல் தொடர்கிறான்.

"முன்னால நின்ற மற்றப்பெடியளுக்கு சாப்பாடு கொண்டுபோய் கொடுத்துவிட்டு றைக்ரரில் இரண்டு பேர் வந்திருக்கினம். பிறகு என்ன இந்த மரத்திற்கு முன்னாலை வரக்க கோடெக்ஸ் வெடிக்க, மரம் சடாரெனமுறிந்து வீதிக்கு குறுக்கே விழ இவர்கள் திகைத்தார்கள், என்ன செய்வதென முடிவு எடுக்கமுதல் இரண்டு கிளைமோரும் வெடிக்க தொடர்ந்து எல். எம்.ஜி ஆல் அவன் பொழிந்து தள்ள என்ன நடந்ததென்று தெரியிறதுக்க முதலே இரண்டுபேரும் போய்ச்சேந்திட்டினம். வந்தவங்கள் மினக்கடாம உடனேயே போயிட்டாங்கள், பிறகென்ன எங்கடயாக்கள் வந்து பார்க்கேக்க ரைக்ரர் ஒரு பக்கத்தில் பிரண்டுகிடக்க, இரண்டு பேற்ற பொடியும் பக்கத்தில, பக்கத்தில கிடந்தது". இவ்வளவையும் மூச்சு விடாமல் சொல்லிமுடித்தவன் சிறிது நேரம் அமைதியாக வருகின்றான்.

திடீரென இவனைக்கேட்கிறான். "அண்ணா! உலகில சிறந்த கெரில்லா எதிர்ப்பு இராணுவம் என்று எதை கருதுறீங்க?' திடீரெனக்கேட்கப்பட்ட இக்கேள்விக்குரிய பதிலைச் சொல்லமுடியாமல் தடுமாறுகின்றான். இவனை அதிகம் சோதிக்க விரும்பாதவன்போலும் சந்திரன் சொல்கிறான் "ஸ்ரீலங்கா இராணுவம் தான்" இவன் ஒன்றும் விளங்காமல் அவனைப்பார்த்துக் கேட்கின்றான் "ஏன்? அமெரிக்கன்தானே இவங்கட ஜங்கிள் கொமண்டோசுக்குகெல்லாம் பயிற்சி கொடுக்கிறாங்கள் அப்படியெண்டால்" என்று தொடர முனைந்தவனை இடைமறித்தவன். "இல்லை உலகிலேயே தலைசிறந்த கெரில்லா இயக்கமெண்டு பேரெடுத்த ஆக்கள் நாங்களெல்லோ அப்படியெண்டால் ஸ்ரீலங்கா

இராணுவம்தான் சிறந்த கெரில்லா எதிர்ப்பு இராணுவமாக இருக்கமுடியும், அதனால்தான் அவங்கள் எங்களுக்கு தாக்குப்பிடிக்கிறாங்கள். இல்லாட்டி நாங்கள் எப்பவோ வேண்டியிருக்கவேண்டும்." தர்க்கரீதியான அவனின் வாதம் ஏற்றுக்கொள்ளக்கூடியதாகவே இருக்கின்றது.

"அண்ண உங்களுக்கு இன்னொரு விசயம் தெரியுமே.... ?" என்ன விசயம்" ? "CIA காரங்கள் இந்திய இராணுவத்திடம் அவையள் இங்கு பெற்ற அனுபவங்களை பகிர்ந்துகொள்ள விரும்பிறதாகக்கேட்டிருக்கினமாம். பேப்பரில படிச்சனான்." "ஏன் வியட்னாம் மாதிரி எங்கேயும் போய் மூக்கை நுளைக்கப்போகினமே? உலக அரசியல்பயிற்சி எங்களுக்கு பெரிசா ஒண்டும் தெரியாதுதானே, ஆனால் வியட்னாம் வரலாறு எங்களுக்கு ஒரு உற்சாகமூட்டும் விடயம் தானே! "கேட்டவன் ஏதோ யோசித்தவன்போல் திடீரென சொல்கிறான்" அண்ண! இவங்கள் ஜங்கிள் கொமாண்டோசுக்கு ஒருக்கா நல்லாகொடுக்கவேணும். இல்லாட்டி இப்படி தொடர்ந்து வாலாட்டிக்கொண்டே இருப்பாங்கள். "ஓமோம் ஒருக்காக கொடுக்கத்தான் வேணும்" நானும் கேள்விப்பட்டனான் எண்பத்தி ஐந்திலயாம் வடிவா ஞாபகமில்லை சொன்னவங்கள், ஏதோ ஒரு விடயத்தை சொல்லப்போகிறான் என எதிர்பார்த்த சந்திரன் இவனைத்துரிதப்படுத்துகின்றான்

"அண்ணை சொல்லுங்கள்." "இப்படித்தான் சுதுமலையில் கிட்டண்ணா இருந்த போது இஸ்ரேல் பாணியில் கொமாண்டோ றைற்பண்ண ஐந்து கெலியில வந்து இறங்கினவையள் பிறகென்ன கிட்டண்ணையின்ர கொமாண்டிங்கெல்லே வேண்டிக் கட்டிக்கொண்டு திரும்பிற்றினம்." "பிறகு ஒருக்காவும் இவங்கள் முயற்சிக்க இல்லையே?" "அதுக்குபிறகு அந்த முறையைக் கைவிட்டிட்டினம். ஆனால் அண்மையில் ஆகாயப்படையும் நேவிக்காறங்களும் சேர்ந்து சுண்டிக்குளத்தில எங்கட கடற்புலிகளின்ற ராடர் நிலயத்தை கொமாண்டோ ரெயிட் பண்ண வந்து வேண்டிக்கட்டினவையள் தானே. உனக்கும் தெரியும் தானே?" "ஓமோம் அதில அவன்ற போட்ஒன்றும் கெலியொன்டும் சேதமாகப்போனது. எங்களில ஒரு லெப்ரிணன்ட் கேணலும் முடிஞ்சுது." எனக்கூறினான். "என்ன இருந்தாலும் நாங்க ஒரு ஸ்ராண்டட்டான இராணுவத்தோடதான் சண்டை பிடிக்கிறம். கவனமாக இருக்கவேணும் அவன்ற கிறிக்கற் ரீம் மாதிரி அவனும் வளர்ந்துகொண்டு வாறான். என்று கூறிய சந்திரன் சண்டையைக்கொண்டு போய் கிரிக்கட்டோட ஒப்பிட்டதை இவனால் விளங்க முடியவில்லை. அப்படி இருந்தும் தொடர்ந்தும் ஆமோதிக்கின்றான்.

"அண்ண எனக்கு ஒரு பழசுசொன்னது ஞாபகத்திற்கு வருகின்றது" "என்ன விசயம்?" "அந்தாள் சொன்னது தம்பி! நீங்கதான் சிங்களவங்களுக்கு சண்டை பழக்கிறீங்கள் பொய்யெண்டா இருந்து பாருங்கோ முந்தி இவங்கள் இப்படி சண்டைபிடிப்பாங்களோ! மோட்டுச்சிங்களவங்கள் என்று தான் கூறுகின்றனாங்கள் அப்ப பிரச்சனை நடக்கேக்க இந்தியாவின்ர உதவியத்தானே நாடினவங்கள்." "அதிலையும் உண்மை இல்லை என்று இல்லை!. ஆனால் சூழலுக்கு அடப்பண்ணுறது என்பது இயற்கையான விசயம் தானே'!' இவன் தனது கருத்தை முன்வைக்க அதுவும் சரிதான் என்கிறான்.

"அண்ண! "அவங்களும் இப்ப மாவீரர் துயிலும் இல்லம் மாதிரி கட்டுறாங்களாம்!" சந்திரன் வியப்புடன் கேட்கின்றான். "ஓமோம் எதிரி எங்களைப்பார்த்து திருந்துகிறானோ இலலையோ படிக்கிறான். ஆனால் கொஞ்சம் அல்ல நிறையவே அநாகரீகமாகவும் நடக்கின்றான். இல்லாட்டி எங்கட மாவீரர் மயானத்தை உழுது தள்ளுவானே!" இதைக்கேட்கும்போது அவனது மூச்சில் சூடு அதிகமாகி இருப்பது தெரிகின்றது. நீங்கள் சொல்லுகின்றதும் சரியண்ணை.

அவங்களுக்கு யுத்த தர்மம் தெரியாது. நல்லகாலம் எங்கட தளபதியள் நாங்கள் மண்டைதீவுக்குள்ள இறங்கேக்க சொன்னவையள் கொப்பேக்கடுவன்ர சமாதி கட்டிவைத்திருக்கிறாங்கள். அதனை ஒன்றும் செய்யவேண்டாம் எண்டு. இல்லாட்டி நாங்களும் எதுவும் செய்துபோட்டு வர, எங்களுக்கும் அவங்களுக்கம் வித்தியாசம் இல்லாமல் போயிருக்கும் என்று கூறியவன் முன்னால் போன போராளி ஒருவன் பாரத்தை விழுத்திப்போட்டுநிற்க "நான் போய்த்தூக்கிவிடுகிறன். நீங்கள் கெதியா வாங்கோ" சொல்லிவிட்டு தனது தோழில் இருக்கும் பாரமூட்டை குலுங்கக், குலுங்க ஓடிப்போகிறான். இவனோ "இதுக்குமேல் வேகமாக நடக்க இயலாது பின்னால வாறகுறுப்போட வாறன் நீ முன்னால்போ" என்று கூறி அனுப்பிவிட்டு தனது வேகத்திற்கே நடக்கிறான்.

களைப்பு அதிகமாக இவன் பின்தங்கத்தொடங்கினான். இவனின் பின்னால் வந்த குறுப்காறரும் நின்று விட்டார்கள். அவர்கள் சற்று நேரம் இடைவெளி விட்டுத்தான் வருவார்கள் இவனுக்கு முன்னால் சென்றவருக்குமான இடை வெளி அதிகரித்துக்கொண்டே வந்தது.தண்ணீர்த் தாகம் வாட்டத் தொடங்கிவிட்டது. இனி ஒன்றும் செய்ய இயலாது என்னும் நிலையில் இரண்டு முரடு தண்ணீர் குடிக்கின்றான். "சீ ...... கனக்கா குடிக்கக்சுடாது

பிறகு கஸ்டப்படவேணும் என உள்மனம் பயமுறுத்த நீர்க்கானை மூடிவிட்டு மீண்டும் நடக்கின்றன். முன் சென்றவர்கள் வளைவுகளில் மறைந்து விட்டார்கள். இவனுக்கோ களைப்பு அதிகரித்த வண்ணம் இருக்கிறது. குருதியில் குளுக்கோஸ் எல்லாம் குறைஞ்சு போயிட்டுது. அதுதான் களைக்குது சீ.... இப்படித்தெரிந்தால் குளுக்கோஸ் எடுக்க இயலாது என்றாலும்கொஞ்சம் இரண்டு இரண்டு முரடு தண்ணீர் குடிக்கின்றான் "சீ.... கனக்க குடிக்கக்கூடாது. பிறகு கஸ்ரப்படவேணும் என உள்மனம் பயமுறுத்த நீர்க்கானை மூடி விட்டு மீண்டும் நடக்கின்றான். முன் சென்றவர்கள் வளைவுகளில் மறைந்து விட்டார்கள். இவனுக்கோ களைப்பு அதிகரித்த வண்ணம் இருக்கிறது. குருதியில் குளுக்கோஸ் எல்லாம் குறைஞ்சு போயிட்டுது. அதுதான் களைக்குது சீ... சீனியாவது டம்பண்ணிக்கொண்டுவந்திருக்கலாம் என தன்னைத்தானே நொந்துகொள்கின்றான். இன்னும் கொஞ்சம் தண்ணீர் குடித்தால் கெதியா நடக்கலாம் பிறகென்ன மீண்டும் இரண்டு முரடு குடிக்கிறான். தாகம் தீர்ந்த மாதிரி இல்லை. தொடர்ந்து மடமடவென வயிறு நிறைய தண்ணீர் குடித்தான். இப்ப நிலைமை மோசமாகப்போயிட்டுது. நிறைய தண்ணீர் குடித்ததால் நடக்க ஏலாமல் இருக்குது. தவளை விழுங்கின சாரைப் பாம்பு நிலமை மாறிவிட்டது. மெல்ல மெல்லமாக நடந்துகொண்டு இருக்கின்றான்.

இருமருங்கிலும் காடு. இருள் மெல்ல சூழத்தொடங்கிவிட்டது. சிறுசத்தம் கேட்டாலும் மனம் திக்கென அடித்துக்கொள்கிறது. "சாகிறது பிரச்சனை இல்லை சண்டையெலலோ குழம்பிவிடும்" என மனம் குழம்பி விட்டது.

"தட்டித்தவறி ஆமியின்ற ரெக்கிக்காறங்க வந்தால் என்ன செய்யிறது?" மனம் ஒத்திகைபார்க்கத்தொடங்கிவிட்டது. ரவுண்ஸ் அடிக்கிறதா? இல்லை குப்பிகடிக்கிறதா? அல்லது குண்டு அடிக்கிறதா? மனம் கட்டுக்கடங்காமல் கேள்விகள் கேட்கத்தொங்கிவிட்டது.

''இதென்னடா மனம் தான் போனபோக்கில போகிறது ."தன் மனதை தானே நொந்து கொள்கிறான். எனக்கு நல்ல பலனாம் சூரி டொக்ரர் கைரேகை பார்த்து பலன் சொன்னவர், எப்படி இருக்கு? சண்டைக்குப்போற நேரத்தில சாத்திர நினைவு! இந்த நேரம் பார்த்து நடுக்காட்டில் ஆந்தை ஒன்று அலறும் சத்தம் கேட்கிறது.

"இது என்னடா கஸ்ரகாலம், முந்தி படங்களில சுடுகாடு போன்ற

இடங்களைக் காட்டேக்க ஆந்தை கத்துற மியூசிக்தான் போட்டு பயத்தைக்கூட்டுவாங்கள். மனம் முன்பு பார்த்த படக்காட்சி ஒன்றை நினைவூட்ட சாடையாக பயம் தொற்றிக்கொள்கிறது. அப்பொழுது இராயவால் குருவியொன்று காட்டு வீதியை கடந்து அருகில் இருந்த மரக்கிளை ஒன்றில் வந்து அமர்கின்றது.

தலையுடன் அலகும் கறுப்பாக இருக்கிறது. உடலும் இறக்கையும் மருண்கலர், வாலின் அடிப்பகுதியில் வெள்ளை பளிச்செனத்தெரிகிறது. வாலின் ஏனைய பகுதிகள் மருண்கலராகவே இருக்கிறது. வால்நுனி மீன்வால் போல் இரண்டாக பிளந்திருக்கிறது. பார்க்க அழகா இருக்கிறது. சாதாரண நேரமாக இருந்தால் இந்த குருவியை பார்க்கிறதற்கு என்று ஐந்து நிமிடமாவது செலவழித்திருப்பான். இப்பொழுது இதைப்படைத்த இயற்கைக்கு ஒரு சபாஸ் சொல்லிவிட்டுப்போகத்தான் முடிகிறது. முன்னால் போகிறவர்களை எட்டிப்பிடிக்கவேண்டும் விரைவாக நடக்க முயல்கின்றான். முடியவில்லை எனவே கால்போன வேகத்திலேயே நடக்கிறான்.

வளியில் ரெக்கிக்காரர் சந்திக்கிறார்கள் ‘‘என்ன அண்ணா! தனியா வாறியள்? எட்டிப்போய் பிடியுங்கள் 250 மீ தூரத்திலதான் போகினம். இல்லாட்டி நாங்கள்தானே சாவறிக்கை எழுதவேண்டிவரும்’’ அவர்கள் கூற அவர்களுக்கும் புன்சிரிப்பொன்றை வழங்கிவிட்டு தனது வேகத்திலேயே நடக்கின்றான். இவ்வளவு நேரமும்காய்ந்து பாதையில் நடந்துகொண்டிருந்தவனுக்கு இப்பொழுது வளியில் ஒரு சிறு கிடங்கு தென்படுகிறது. அதனுள் நீர் நிற்கிறது.

‘‘ஒரு பாய்ச்சலில் கடந்துவிடவேண்டும். கால் புதைந்தால் நடக்கேக்க வழுக்கும்’’ என எண்ணியபடியே ஓடித்தாவிப்பாய்கின்றான். ஐந்து வயது குறைந்த மாதிரி இருக்கிறது ‘‘அடச்சனியன் ஒரு கால் சேத்தில் புதைஞ்சு போயிட்டுது?’ காலை இழுத்து அருகில் இருந்த புல்லில் தேய்த்துப்போட்டு மீண்டும் நடக்கின்றான்.

தன்னை ஒருவரும் கவனிக்கவில்லை என்றவுடன் பாட்டுப் படிக்கத் தொடங்கி விட்டான். மற்ற ஆட்களுக்கு முன்னால பாடமாட்டான் ஏன்னெனில் எஸ். சாந்தனுக்கெல்லாம் வேலை இல்லாமல் போயிடும் என்பதால். சின்ன வயதில இரவில் தனியாகப்போக பயம் தெரியாமல் இருப்பதற்காக பாடுவது அவனுக்கு ஞாபகத்திற்கு வருகின்றது.

அட என்ன அறுபதுக்கு மேற்பட்ட மாடுகள் வளியில நிற்குதுகள். அடர்ந்த காட்டிற்குள் ஆட்கள் அற்ற கிராமங்களுக்குரியவை போலும் மனித நடமாட்டங்களை கண்டதால் என்னவோ அவைகள் கண்களில் மகிழ்ச்சி தெரிகிறது போல் ஒரு பிரமை ஏற்படுகிறது. மாடுகள் ஏக்கத்துடன் பார்ப்பது போன்று தெரிகிறது. "எப்ப எங்களை வளர்த்தவங்கள் வருவினம்? " எனக் கேட்பது போல் இருக்கிறது. "விரைவில்வருவினம் " என அவற்றிக்கு தடவிக்கொடுத்து பதில் சொல்ல அருகில் செல்கிறான். அதில ஒன்று ஒருமாதிரி தலையை ஆட்டியது. இவனுக்கு யோசனை பிடித்து விட்டது. சனப்பிழக்கம் இல்லாத இடத்தில நின்ற மாடுகளுக்கு குழுப்பிடித்திருக்கும், இடிச்சுதெண்டா குடல் எடுத்துப்போட்டுத்தான் விடும்! "எவனோ எப்பவோ பயப்படுத்தியது ஞாபகத்திற்கு வர " "சும்மா கிடக்கும் சங்கை ஏன் ஊதிக்கெடுப்பான் "என எண்ணி விலத்தி நடக்கிறான். "ஒரு கிழமைக்கு முன் மூன்று மாடு சுட்டனான். பிறகு பார்த்தா அன்று வெள்ளிக்கிழமை, பெரியகவலையாகப் போயிட்டுது. கொன்றபாவம் திண்டால் போய்விடும் என மனோச்சண்ண சொன்னதை நம்பி அடுத்த நாள் மூன்று நேரமும் மாட்டிறச்சி சாப்பிட்டனான். அப்படி இருந்தும் திருப்தி வரவில்லை. அடுத்த நாள் ஐம்பது மாடுகளுக்கு கிணற்றில் இருந்து தண்ணீா அள்ளி வச்சனான்" நினைக்க அவனுக்கு சிரிப்பு வந்தது. வெளியில எவ்வளவுதான் வீரம் கதைத்தாலும் உள்ளுக்குள்ள பாவ புண்ணியங்களுக்கு பயம் இருக்கத்தான் செய்கிறது.

காட்டில் இருந்து வயல் வெளியில் ஏறினான். மீண்டும் கிழக்கு நோக்கித் திரும்பி நடக்க பெரியகுளம் அணைக்கட்டு தென்பட்டது. அதன் அருகில் நிற்கும் மரங்களின் வேர்களில் அமர்ந்து போராளிகள் இளைப்பாறுகின்றனா். இவனுக்கு அப்பாடா என்றிருந்தது. மீண்டும் அணியுடன் இணைந்தான். குளப்பக்கம் திரும்புகிறான். சூரியன் தன்னை முற்றாக மறைத்திருந்தாலும் இருள் காட்டினுள் இருந்ததிலும் பார்க்க குறைவாக இருக்கிறது. நீரப்பரப்பில் கொக்குகள் ஒற்றைக் காலில் நிற்பது தெளிவாக தெரிந்தது.

"கொக்கு ஏன் மச்சான் ஒற்றைக்காலில் நிற்குது?" "அது தானே இவ்வளவு நாளும் நான் யோசிக்கவில்லை ஏன் என்று சொல்லு"' ஏன் . .ன்று சொல்லு" மற்றவன் கேட்க முதலாம் ஆள் சொல்லுகிறான் " மற்றக்காலையும் தூக்கினால் விழுந்திடும், " இரண்டாம் ஆளுக்கு அசடு வழிகின்றது. "உனக்கு பெரிய அறுவை யோக்கர் என்று நினைப்பு" "மச்சான் ஓடு மீன் ஓட உரு மீன்

வரும்வரையும் காத்திருக்குமாம் கொக்கு" கொக்கு ஒன்று டாக்கென தன்னுடைய அலகை நீரினுள் செலுத்தி வெளியிலெடுக்க, அதில் அகப்பட்டு மீன் ஒன்று துடிதுடிக்கிறது

"இப்படித்தான் நாங்களும் எடிபல என்னும் பேரில் எங்களை வலிய போருக்கு இழுத்து அழிக்க எதிரி மேற்கொண்ட சதியில் மாட்டிக்கொள்ளாமல் விலத்திக்கொண்டவர்கள் இப்ப ஜெயசிக்குறு என வருகினம் சரியான நேரத்தில் நல்லா கொடுத்தால் உந்தமீன்களாக ஆட்லறிகளும் டாங்கிகளும் எங்களிட்ட அகப்படும்" மனம் எண்ணத்திலேயே புழகாங்கிகம் அடைகின்றது.

ஒரு ஐந்து நிமிடம் ஆறிய பின்னர் மீண்டும் நடக்கத்தொடங்கினார்கள். சிறிது நேரத்தில் இருள் சூழ்ந்துவிட்டது, மாலை வேளைக்கே உரிய காலநிலை வேர்த்துக்களைத்து இருந்த உடலுக்கு இதமாக இருந்தது. மாலை ஏழு மணியளவில் குடியிருப்பு ஒன்றை அடைந்தார்கள். அங்கு சற்று தாமதிக்கவேண்டி இருக்கிறது. இவர்களுக்குப்பின்னால் வந்துகொண்டிருக்கும் அணியும் இவர்களுடன் சேர்ந்த பின்தான் நகர்தலைத்தொடங்கவேண்டும். இப்பொழுது பொறுப்பாளர் எவரும் இவர்களுடன் இருக்கவில்லை. இவர்கள் வீதியின் ஒரு ஓரமாகவும், பெண்போராளிகள் மறுபக்கமாகவும் அமர்ந்துள்ளார்கள். நெஞ்சோடு இருக்கும் கோல்சரும் பாரமாகத்தான் இருக்கிறது. ஆனால் அதனைக் களற்றி வைக்க முடியாது, ஏனெனில் எதிரியால் ஆபத்துக்களைச் சந்திக்கலாம். அருகில் இருந்த வீட்டுக்கிணற்றில் நீர் எடுக்கக்கூடிய வசதி இருக்கிறது, எனவே கையோடு கொண்டுவந்திருந்த தண்ணீரை போதியளவு குடித்தார்கள்,

பசிக்களையினால் சிறுகுடல் பெருங்குடலை உண்பதுபோல் இருக்கிறது. "அவசர தேவைக்கென கொண்டுவந்திருந்த பிஸ்கட்றை சாப்பிடுவோமா?" என யோசித்தார்கள். ஏனெனில் அதற்குப்பொறுப்பாளரின் அனுமதிவேண்டும் பொறுப்பாளர் நிச்சயம் அனுமதிக்கமாட்டார். இப்ப என்ன செய்யலாம் யோசிக்கின்ற அளவிற்கு பசிவிடவில்லை பிஸ்கட் பைக்கற்றை உடைத்து அனைவரும் சாப்பிட்டார்கள். இப்பொழுது உடலில் சற்று தெம்பு வந்தது மாதிரி இருந்தது.

கண்கள் சுற்றுச்சூழலை அவதானிக்கத் தொடங்குகின்றது. எழுந்து தண்ணீர்க்கானையும் தூக்கிக்கொண்டு வீட்டு வளவொன்றுக்குள் செல்கின்றான். வீட்டுமுற்றத்தில் காணப்படும் சருகுப்படைகள் மீது கால்படும்போது ஏற்படும்

மெத்தெனும் உணர்வு மூலம், குறைந்தது மூன்று மாதங்களிற்கு மேலாக அச்சருகுகள் சேர்ந்திருக்க வேண்டும் என ஊகிக்க முடிகிறது. நடைபாதை ஓரமாகவும் வேலியோரமாகவும் காணப்பட்ட பூக்கண்டுகள் அரைஉயிருடன் வாடிக்காணப்படுகின்றன.

வீட்டு யன்னல்களும், கதவுகளும் திறந்து காணப்படுகின்றன. இதைப்பூட்டிவிட்டுத்தான் வெளியேறி இருப்பார்கள். ஆனால் இவை திறந்து கிடக்கின்றன. குண்டு வெடிப்பின் அதிர்ச்சியால் இருக்கலாம். யன்னல் கம்பிகளுக்கிடையே பின்னப்பட்டிருக்கும் சிலந்தி வலையைத் தொட்டுப் பார்க்கின்றான். அவை விரலுடன் ஒட்டிக்கொண்டு மீன் பிடிப்பதற்கு கரைவலையை வீசி, பின்னர் இழுக்கும் போது குவிந்து வருவதுபோல் இழுபட்டு வருகின்றது. சில நாட்கள் இச்சூழலில் செல் விழுந்திருக்கவில்லை. விழுந்திருந்தால் அதிர்ச்சியில் இச்சிலந்தி வலைகள் அழிந்திருக்கும். முறிந்து வீழ்ந்த மரங்களும் கொப்புகளும் இவனது எண்ணத்தை உறுதி செய்தன. இச்சிலந்திவலை போன்றது இராணுவக்கண்ணோட்டத்தில் இவ் வன்னிமண்ணாகும். சிலந்திவலையில் பூச்சிகள்விழுந்து மாட்டிக்கொள்வதுபோல் எதிரிவந்து சிக்கப்போறான். வலையில் சிக்கிய பூச்சிகளை சிலந்தி தான் பின்னும் நூல்களினால் சுற்றிக்கட்டி பின் தேவைப்படும் போது நொதியங்களைச் செலுத்தி அதனைக் கொன்று உண்ணும். இவ்வாறே இங்கு வந்து சிக்கப்போகும் எதிரி எங்களுக்கு வசதிகள் ஏற்படுகின்றபோதெல்லாம் தாக்கப்படுவான். வன்னிமண்ணில் அகலக்கால் பரப்பும் சிறிலங்கா இராணுவம் எம் மிதி வெடிகளில் கால்களை மட்டும் அல்ல எறிகணை வீச்சில் உயிர்களையும் சாவுகொடுக்கப்போகிறது. வன்னியின் இராணுவ சகதியுள் கொஞ்சம் கொஞ்சமாகப் புதையும் அவனை மீட்பதற்கு அமெரிக்கன் இராணுவம் வந்தாலும் இயலாமல்தான் போகும். இந்த அரியசந்தர்ப்பத்தை நாங்கள் பயன்படுத்தப் போவதைப் பொறுத்தே எங்களின் எதிர்காலம் தீர்மானிக்கப்படும். என எண்ணுகிறான். உடல்களைப்பில் இருந்து விடுபட்டவன் கிணற்றடியைநோக்கிச் செல்கிறான். எட்டிக் கிணற்றைப்பார்க்கிறான். அடியில் இருக்கும் நீர் தெரியவில்லை. கரிய இருள் கிணற்றில் தென்படுகிறது. அருகில் இருந்த வாளியை கிணற்றுள் இறக்குகின்றான். வாளி தண்ணீரில் முட்டும் சத்தத்தையும், கயிறு செல்லும் தூரத்தையும் வைத்துநோக்கும் போது சுமார் நற்பது அடிகள் ஆளம் இருக்கும் என்பது தெரிகிறது. கருங்கல் நிறைந்த இம்மண்ணில் இப்படிக் கிணற்றை வெட்டுவதற்கே மக்கள் எவ்வளவு கஸ்ரப்பட்டிருப்பினம். வன்னிமக்கள்

உண்மையில் உழைப்பாளிகள் தான். கிணற்றடி நீரைக்கண்டு பல கிழமைகள் ஆகிவிட்டிருந்தது. அருகில் காணப்பட்ட அறுகம்புற்களின்பசுமைக்குரிய அறிகுறிகள் எதுவும் காணப்படவில்லை. இப்பொழுது சிதறப்படும் சிறதளவு நீரினால் இவை மீண்டும் தளிர்க்கலாம். ஆனால் மீண்டும் இவை இறக்கும் நிரந்தரமாக உயிர்க்கவேண்டும் என்றால் இவ்வீட்டிற்குரியவர்கள் மீண்டும் இங்கு நிரந்தரமாக குடிவரவேண்டும். அதற்கு நாங்கள் போராடுவதுதான் ஒரேவழி ஓ! தமிழீழத்தின் புற்களே நீங்களும் இப்போராட்டத்தின் சுமைகளைச்சுமக்கிறீர்கள். எங்களால் புரிந்துகொள்ளமுடிகிறது. நீங்கள் விரைவில் தளிர் விடுவீர்கள். அப்பொழுது எங்கள் மண்ணில் பசுமை பூக்கும்'' புற்தரைக்கும் இவன் மனம் ஆறுதல் கூறுகின்றது.

தொடர்ந்து வந்த அணியினரும் இவர்களுடன் இணைந்து கொள்கின்றனர். "அவரிடம் விடயத்தைச் சொல்வோமா?' என எண்ணியவன் மெல்ல முணுமுணுக்கிறான் "அண்ண! நாங்கள் கொண்டு வந்த பிஸ்கட் எல்லாம் சாப்பிட்டு முடித்து விட்டோம்''

"ஏன் அவசரப்பட்டனீங்கள்,? நாளைக்கு இரவுதான் சண்டை. பகலுக்கு என்ன செய்யப்போறியள்?'' அவரின் கேள்வியால் இவர்களைப்பயம் தொற்றிக்கொள்கின்றது.

"அப்படியெண்டால்! நாளைக்கு முழுக்க சாப்பாடு இல்லை சீ.... ஏதும் செற்றப் செய்திருப்பினம். ஒரு நாள் சாப்பிடாமல் போய்ச் சண்டை பிடிக்க ஏலுமே! அப்படித்தான் சாப்பாடு சப்ளை செய்யிறதில ஏதும் பிரச்சினை வந்தாலும். சனம் தானே நல்ல தென்னை மரங்கள் வைத்திருக்குதுகள் இது நாங்கள் எல்லோரும் இங்க ஒரு மாசம் நிக்கிறதுக்கு காணும்'' எனத்தன்னுள் சமாதானம் செய்து கொள்கின்றான்.

இப்பொழுது நன்றாக இருட்டிவிட்டது இனி எவரும் தனித்துவிடுபட இயலாது. குறுப்போட நடக்க வேண்டும். அச்சூழலினால் எச்சரிக்கப்படுகின்றார்கள், ரோச் அடிக்கப்படாது, கதைக்கக் கூடாது, லைன் குழப்பக்கூடாது, வழமையாக இவ்வாறன சந்தர்ப்பங்களில் தரப்படும் அறிவுறுத்தல்கள் மீண்டும் தரப்படுகின்றது. மீண்டும் நகரத்தொடங்குகின்றார்கள். அவர்கள் போகும் பாதை தார்வீதியோ அன்றி கிரவல் வீதியோ அல்ல. மழை பெய்தால் வாய்க்கால்களாக மாறக் கூடிய பாதை நீரோடும் இடங்களில்

உள்ள மணல்திட்டுக்கள் தட்டுப்படுகின்றன. பாதம் புதைவதால் நடப்பதற்கு கடினமாக இருக்கிறது. இதனால் முன்னால் றைக்ரரும் ஓடி இருக்க வேண்டும். அதுவும் மழைகாலத்தில், ஏனெனில் சில்லுகள் வெட்டின சேற்று மண் கட்டியாகிக்கிடக்கின்றது. கால்களை அவதானமாக வைக்கவேண்டும். இல்லாவிட்டால் பிரட்டி விடப்போகுது. அவனுக்கு முன்னால் நடப்பவர்கள் பழக்கப்பட்ட பாதையில் நடப்பது போல் மிகவும் விரைவாக நடக்கத்தொடங்கினார்கள். இவனது கால்கள் இடறுப்படுவதும் தடுமாறுவதுமாக உள்ளது. ஓட்டமும் நடையுமாக செல்கின்றான்.

“இதனைத்தான் கரடுமுரடான பாதை என்று சொல்லுக்கின்றவையளே!” என்று எண்ணுகிறான். திடீரென முன்னால் போனவர்கள் ஓடத்தொடங்கினார்கள் வரிசை இடையறாமல் இருக்க இவனும் சேர்ந்து ஓடவேண்டி ஏற்பட்டது. ஏற்கனவே நடந்ததால் ஏற்பட்டவலி இப்பாரத்தையும் தூக்கிக்கொண்டு ஓட வேண்டியிருக்க மூச்சிரைக்கின்றது விலாஎன்புகள் ஒன்றுடன் ஒன்று உரசுவதுபோல் வலி எடுக்கத்தொடங்கிவிட்டது. இந்த நேரம் பார்த்து றைபிள்பிடி ஆடும் சத்தம் வேறுகேட்கின்றது. மூவ் பண்ணேக்க இப்படி றைபிள் சத்தம் கேட்க்கூடாதே மனம் எச்சரிக்கிறது. எனினும் எதையும் பொருட்படுத்தாமல் ஓடுகிறான். ஏன் இவர்கள் இப்படி ஓடுறாங்கள்?' இடைக்கிட திட்டவும் செய்கின்றான். ஆனால் ஆரட்ட கேட்கிறது. ஓடியவர்கள் ஒருவீதியில் ஏறினார்கள். வீதி கொஞ்சம் நல்லா இருக்கிறது. இப்ப காரணம் விளங்குது. நல்ல வீதியில் ஏறியவுடன் முன்னால் சென்றவர்கள் வேகமாக நடக்கத்தொடங்க பின்னால் வந்தவர்கள் வேகமாக ஓட வேண்டி ஏறுபட்டது. திடீரென பின்னால் வந்த அணியினர் விடுபட்டுப்போனார்கள் எனவும் அதற்காக சற்றுநேரம் நிற்கவும் சொன்னார்கள்.

மத்தியானத்தில் இருந்து இன்னும் ஒண்டுக்குப் போகவில்லை இப்ப அவசரம் போல் இருக்குது. என்ன செய்யலாம்? நிலமை பெரிய சங்கடமாகப்போயிட்டுது. லைனில் இருந்து பிரிந்துபோக இயலாது. ஆட்கள் பின்னாலையும் நிற்கினம். இது என்னடா நிலமை! என்று மனம் வெறுக்கிறது. இனி ஒன்றும் செய்ய இயலாது என்று நினைத்தவன் பின்னால் நின்றவனிடம் மெல்லச் சொல்லிப்போட்டு கையில் இருந்த தண்ணீர்க்கானையும் நிலத்தில் வைத்துவிட்டு அருகில் இருந்த வேலியைப் பிரிச்சு மெல்லமாக தாண்டிச் சென்று சிறுநீர் கழிக்க அப்பாடா! என்கிறான்.

அந்த இரவில் அந்தச்சத்தம் பெரிதாகத்தான் இருக்கிறது. சற்று ஆறுதலாக இருந்தது. பிள்ளை பிறந்துவரும் போது மனமகிழ்வை சந்திக்கும் சந்தர்ப்பங்களில் இதுவும் ஒன்றாம். அதாவது கண்ட இடங்களில் சிறுநீ ர் கழிக்கக் கூடாது என பெற்றோரால் அறிவுறுத்தப்பட்டு அதனை அடக்கிவைத்து உரிய இடத்தில் கழிக்கும் போது மகிழ்வைச் சந்திக்குமாம். எங்கோ வாசித்தது சரிபோலப்பட்டது. இந்த வண்டில் மாடுகளும்தான் கனதூரம் நடக்கும் எங்கு நிறுத்தப்படுகிறதோ அங்கு கொஞ்சமாவது சிறுநீர் கழிக்கும், பலவாறு எண்ணிய வண்ணம் இவன் வருவதற்குள் அவர்கள் நகரத்தொடங்கிவிட்டார்கள். விழுந்தடித்து ஓடிப்போய் தண்ணீர்க்கானை தூக்கிச்சென்று அவனது இடத்தை அடைகிறான்.

சிறிது தூரம் நடந்த பின்னர் ஒரு இடத்தில் வீதியில் இருமருங்கிலும் அமர்கின்றார்கள். இரவுச்சாப்பாட்டை சாப்பிடச்சொன்னார்கள். தோளில் கொண்டு போன பாக்கில் இருந்து எடுத்து சாப்பிடத்தொடங்கினான். அந்தப்பசிக்கு இந்தப்புரியாணிப்பார்சல் தேவாமிர்தம் போல் இருக்கிறது. அது சரி தேவாமிர்தம் உறைக்குமா ஆரு கண்டது சந்திரனுடன் கதைத்தபடியே கோழி இறைச்சிக்காலை எடுத்து கடிக்கிறான். இது நல்லாத்தான் இருக்கிறது. ஆனால் நேரம் சென்றுவிட்டது பழுதாப்போயிருந்தால்..... நாளைக்கு ஒரே வயிற்றோட்டமாகத்தான் இருக்கும். என்னும் நினைவு வந்தவுடனேயே அவனுக்கு வயிறு கலக்கத்தொடங்கிவிட்டது. இது என்னடா! நாசமாப் போனது என எண்ணிக்கொண்டிருக்கையில் "அண்ணை! வயிற்றுக்க என்னவோ செய்யுது இப்ப என்ன செய்யிறது?" அருகில் இருந்த போராளி கேட்க இவனுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. உடனேயே தனது கோல்சரினுள் தயாராக வைத்திருந்த வயிற்றோட்டத்தை உடனடியாக தடுக்கக்கூடிய குளுசைகளை எடுத்துக்கொடுக்கின்றான். இரண்டு நாளுக்கு உனக்கு வயித்துக்குள் ஒன்றும் செய்யாது. அவனுக்கு கடவுளைக் கண்ட மாதிரி இருக்கிறது. நன்றி சொல்லிட்டு நகர்கிறான். அண்ணா சாப்பாட்டில மிச்சமிருந்தா வையுங்கோ எறிந்து போடாதீங்கோ நாளைக்கு உதவும். இப்படி கனதரம் அனுபவப்பட்டனாங்கள்!. சந்திரன் தனது முந்திய அனுபவம் ஒன்றைச் சொல்கின்றான். ஒரு சண்டைக்கு போகும்போது மிஞ்சினசாப்பாட்டை சொப்பின் பாக்கில் கட்டி மரத்தடியில் புதைத்து விட்டுப்போனாங்கள். 3ம் நாள் சண்டை குழம்பி கலைபட்டு அந்த இடத்திற்கு வந்து சேர்ந்தனாங்கள் பசியோட இருந்த எனக்கு அந்த புளிச்சாப்பாடுதான் கைகொடுத்தது. கெரில்லாப் போராளிகள் அடிக்கடி சந்திக்கும் கடினங்களில் ஒன்றைக் கூறினான். அதற்கு அவசியம் வராமல்

முடித்துவிட்டார்கள். முழுச்சாப்பாட்டையும் சாப்பிட்டு எல்லோருடைய பைகளும் சேகரிக்கப்பட்டு தடயங்கள் விடுபடாமல் உருமறைப்பு செய்யப்படுகின்றது.

வீட்டில் இருந்தால் எப்படி இருக்கும்! மேசையைச்சுத்திவர எல்லோரும் இருப்போம். லாம்பு வெளிச்சத்தில், மறுக்க மறுக்க அம்மா போடுவார். புகழ்ந்தும், குறை கூறியும் சாப்பிடுவம். பள்ளிப்பகிடிகளும், ரியூசன் குறும்புகளும் அலசப்படும். லாம்பு அனைஞ்சாலோ வெளிச்சம் குறைந்தாலோ சாப்பிட மாட்டம். இங்கு நிலைமை! வீதியில் மக்கிமட்டும் தெரியுது. அருகில் இருக்கும்போராளியின் குரல் அல்லது அசைவுக்குரிய சத்தம் மட்டும் கேட்கிறது. கைகழுவவில்லை என்ற யோசனையே வரவில்லை. ஆனால் சாப்பாடு நல்லத்தான் இருந்தது. பசியோடு இருப்பவருக்கு பழம்சோறும் நல்லாய்த்தான் இருக்கும். என்னைக்கேட்டால் உலகிலேயே இந்தப்புரியாணிப்பார்சல்தான் என்பேன். அப்படியெண்டால் அழகும் மனநிலைக்கும் ஏற்ப மாறுபடுமா? மனம் அழகைப்பற்றி ஆராட்சியில் இறங்க இவன் இதனைப் பெரிய கண்டு பிடிப்பாக சந்திரனுக்கு சொல்ல, அவனுக்கு அருகில் இருந்த போராளி யாரடா? இவன். இந்த நேரத்தில் இதைக்கதைக்கிறவன் என்று விழிபிதுங்குவது அந்த இருளிலும் தெரிய மெல்லமாக மௌனமாகின்றான். மீண்டும் பயணம் தொடங்கிறது.

உண்ட களை தொண்டருக்கும் உண்டு என்பது இங்கும் பொருந்தும். மீண்டும் நடக்கத்தொடங்கினார்கள். நடந்து கொண்டே இருந்தார்கள். எதிர்கால எதிர்ப்புக்களையும், நெஞ்சு நிறைந்த தாயகக்கனவுகளையும் சுமந்தவண்ணம் நடக்கிறார்கள். அன்னியரின் இடம் பிடிக்கும் ஆசை இவர்களுக்கு இல்லை. அவனை அழிக்கவேண்டும் என்னும் வெறியும் இவர்களுக்கு இல்லை. ஆனால் அழிவிற்கு அழிவே பதில் கூறும் என்பதால் துப்பாக்கிகளுடன் நடக்கின்றார்கள். வரலாற்றால் இவர்கள் உருவாக்கப்பட்டவர்கள். இவர்கள் அனைவருமே இனிய கனவினை நெச்சில் சுமக்க வேண்டியவர்கள். ஆனால் மூத்த தலைமுறைகள் சுமக்க வேண்டிய பாரத்தை தோளில் சுமந்த வண்ணம் நடக்கிறார்கள். அடுத்த தலைமுறை இதனைச் சுமக்கக்கூடாது என்பதற்காக, மித மிஞ்சிய பாரத்தைச் சுமக்கிறார்கள்.

இப்பொழுது வயல் வெளியினூடு நடக்கின்றார்கள். காடுகள் வெட்டி மக்கள் காணிகள் ஆக்கிய பகுதிகளில் இன்று கள்ளி படர்ந்துள்ளது. எருக்கலை இறுமாப்புடன் இடம் பிடித்துள்ளது. முழங்காலிற்கு மேலாக வளர்ந்திருந்த புற்களை மிதித்து பாதை அமைத்தவண்ணம் நடந்துகொண்டு இருக்கின்றார்கள்.

மீண்டும் ஓடத்தொடங்குகின்றார்கள். வரம்புகள் குறுக்கிடும் போது பாய்ந்தார்கள். அருகில் இருக்கும் வயல் வாக்கால்களிலுள் வீழ்ந்தார்கள். அடிபட்ட இடத்தை நின்று தேத்துவிட நேரமில்லை ஓடி, ஓடி இடைவெளியை நிரப்பிக்கொண்டிருந்தார்கள். பின்னால் வருபவர்கள் தன்னைத்தொடர்கின்றார்களா என நின்று பார்க்கமுடியாது.

ஓடிவா, ஓடிவா எனக்கூப்பிட்டபடியே போராட்டம் கடினம் என்பதை மீண்டும், மீண்டும் உணர்ந்து கொண்டு ஓடுகின்றார்கள். ஆரம்பத்தில் அனுபவித்த கடினங்கள் இப்பொழுது இனிமையான அனுபவங்களாக இருக்கிறது. இது மாதிரித்தான் இன்றைய கடினமான நகர்வும் நாளையொரு அனுபவமாக மனதில் தித்திக்கும் என்பதை அனுபவமாக வளர்த்த வண்ணம் ஓடுகின்றார்கள்.

திடீரென இவனின் பின்னால் வந்துகொண்டிருந்த மிரேஸ் விழுந்துவிட்டான். அவன் கொண்டுவந்த பெட்டியிலதான் ஐஸ் போட்டு இரத்தம் வைக்கப்பட்டுள்ளது. திரும்பிப்பார்க்கின்றான். நல்லகாலம் பெட்டி திறக்கப்படவில்லை. ஆள் எழுந்து ஓடிவந்து சேர்ந்தான்.

“என்ன மச்சான் நடந்தது?” “பின்னால வந்தது ஒன்று பாட்டாவை மிதித்துப்போட்டுது. விழுந்து போட்டன் ஒரு பாட்டா தவறுப்பட்டுட்டுது. இந்த இருட்டில் அதையா தேடுறது. மற்றதையும் கழட்டிப்போட்டு வந்தனான். பாதம் முழுக்க நெருஞ்சி முள்ளு பதம் பார்க்குது” மூச்சிரைக்க மூச்சிரைக்க சொல்ல பெரிய பாவமாக இருக்கிறது. ஆனால் இரத்தம் உள்ள பெட்டிக்கு மட்டும் ஒன்றும் இல்லை என்றவுடன் நம்மதியாக இருக்கிறது.

வயல் வெளியைக்கடந்து ஆறுமுத்தன் புதுக்குளம் எனும் ரோட்டில் ஏறுகின்றார்கள். மீண்டும் நடக்கத் தொடங்குறார்கள். அப்பொழுது வலப்பக்கம் திரும்பி அங்கிருந்த வீடு ஒன்றைக்காட்டி சந்திரன் சொல்கிறான். “இதுதான் போர்க்கண்ணா வீடு” உடனேயே அதனை ஒரு கணம் திரும்பிப் பார்க்கிறான்.

மேற்படி செய்தி ஏனையவர்களுக்கும் வரிசையில் கடத்தப்படுகின்றது. எல்லோரும் ஒரு கணம் தங்கள் வேகத்தை குறைத்து அவ்வீட்டைப்பார்த்துவிட்டு மீண்டும் வேகமாக நகருகின்றனர்.

ஆம்! இந்த வன்னிப்பெருநிலம் முற்று முழுதாக விடுபடுவதற்கு

மாங்குள முகாம் தகர்ப்பு அவசியமாக இருந்தது. அதனை ஒரு முறை செய்ய முற்பட்டு தோல்வியில் முடிந்தது. இரண்டாவது முறையாக அத்தாக்குதல் வெற்றியில் முடிநது அதற்கு மூல காரணமாக அமைந்தது லெப் - கேணல் போர்க்கண்ணை கரும்புலியாக சக்கை லொறிகொண்டுபோய் முகாமினுள் வெடித்தது. இன்றும் அந்த இடத்தில் ஒரு பள்ளம் இருக்கிறது.

ஏனோ அவன் மனம் அங்கலாக்கின்றது ..! போர்க்கண்ணை உங்கள் போன்றவர்களால் விடுவிக்கப்பட்ட மண்ணில் இன்று எதிரி உலாவருகின்றான். ஏன்! உங்கள் வீட்டில் கூட ஒருவரும் வசிக்கவில்லை. போராட்டத்தில் தற்காலிக பின்னடைவுகளும் தந்திரோபாயப் பின் வாங்கல்களும் தவிர்க்க முடியாதவைதான். ஆனால் அவைகள் நிரந்தரமானவையாக முடியாது. மீண்டும் இம்மண்ணில் மக்கள் வந்து வசிப்பார்கள். அதுவரை எங்களுக்குத் துணையாக இரும். உங்கள் பணியை நிறைவேற்றவே நாங்கள் இப்பொழுது நகர்ந்துகொண்டிருக்கின்றோம்." மேற்படி எண்ணமிட்ட இவன் மனம் மலரவன் எழுதிய "போர் உலா" புத்தகத்தை அசை போடுகின்றது.

அவ்வீட்டைக் கடந்தவுடன் போராளிகள் புதிய உத்வேகம் பெற்றவர்களாக வேகம் எடுக்கின்றார்கள். அவர்களின் வேகத்தை கட்டுப்படுத்தி ஒழுங்குபடுத்த அணித்தலைவர்கள் கட்டளை பிறப்பிக்கவேண்டி இருக்கிறது. வோக்கியில் அடிக்கடி முன்னும் பின்னும் தொடர்பு கொண்டு நிரைகளை ஒழுங்குபடுத்துகின்றார்கள். நாங்கள் நகர்வில் இதுவரையும் எவ்வித இடஞ்சல்களையும் சந்திக்கவில்லை என்பதை இடைஇடையே கட்டளைத் தலைமைப்பணியகத்திற்கு அறிவிக்கின்றார்கள். இவ்வாறே இன்னொரு பேரணி கண்டிவீதிக்கு மேற்காக இவர்களுக்கு சமாந்தரமாக நகர்வை மேற்கொள்ளுகின்றது.

இப்பொழுது நேரம் இரவு பத்துமணி. நொச்சிக்குளம் எனும் இடத்தை வந்தடைகின்றார்கள். வீதியின் ஓரமாக இருக்கப்பணிக்கப்படுகிறார்கள். அங்கிருந்து ஆகாயத்தை பார்க்கின்றான். நிலவைக்காணவில்லை. "இவர்களின் கடின வாழ்க்கையினைப்பார்க்க முடியாததால் தன்னை மறைத்துக்கொண்டான் போலும், அப்படியானால் தாரகைகள் ஏன் இன்னும் காணப்படுகின்றன? ஏன் எங்களைப்பார்த்துக் கண்சிமிட்டுகின்றன. பல ஒளியாண்டு தூரத்தில் இருக்கும் நீங்கள் எவ்வளவு அழகாக இருக்கிறீர்கள்?. ஆனால் நீங்கள் வெப்பம் நிறைந்தவர்கள் என்பதும் தெரியும். சூரியனைப்போல் பல மடங்கு

பெரியவர்களும் உங்களில் இருக்கின்றார்கள். நீங்களும் எங்கள் போராளிகள் போன்றவர்களே. ஒரு பார்வையில் வழிகாட்டிகள். இன்னொரு பார்வையில்

ஆபத்தானவர்கள். தியாகத்திலும் நீங்கள் நெருப்பைப் போன்றவர்கள். எவரையும் நெருங்கவிட மாட்டீர்கள். இல்லாவிட்டால் இவ்வளவு பாரிய வெற்றிகளை இம்மண்ணிற்காக பெற்றுக்கொடுத்திருப்பீர்கள்? அது சரி உங்களை நம்பி அந்தக்காலத்தில் பயணம் செய்தார்களாம். நீங்கள் தான் அவர்களுக்குத் திசைகாட்டி அந்தக் காலத்தில் பயணம் செய்தார்களாம். மன்னர்களும் உங்களை வைத்து தான் படை நகர்த்தினார்களாம் அதனால்தான் வழிகாட்டி என அழைக்கப்பட்டீர்களாம். அப்படியாயின் உங்களை வேவுப்புலிகளுக்குத்தான் ஒப்பிடலாம், தெரியாத பாதையினுடாக போரியற்கால ஏற்பாடுகளுடன் பெரும் எண்ணிக்கையில் நகரும் எங்களுக்குப் பாதுகாப்பான பாதைகள் எடுக்க எவ்வளவு கஸ்ரப்பட்டிருப்பீர்கள். இவ்வாறு அவர்களும் தவித்திருக்கும்போது உங்களுடன் உ்ரயாடுவார்களா?"

"என்னண்ணை! கனக்க யோசிக்கிறியள்?" அருகில் இருந்த சந்திரன் மெதுவாக கூப்பிட கனவுலகில் இருந்து விடுபடுகின்றான். "இல்லை மச்சான்! இப்படி எத்தின சண்டை பிடித்தால் தமிழீழம் கிடைக்கும்?" இவனது கேள்வி அவனுக்கு வியப்பைக் கொடுத்திருக்கவேண்டும்.

"ஏன் அண்ணை! அதுக்குள்ள அவ்வளவு களைத்துப்போய் விட்டீர்களா?" ஓம் என்றோ, இல்லை என்றோ பதிலைச் சொல்லாமல் ஆழமான பெருமூச்சொன்றை வெளிவிடுகின்றான்.

இவர்கள் இருக்கும் வீதியின் இருமருங்கிலும் பல வீடுகள் இருக்கின்றன. இது எந்த இடம்? இவன் கேட்க " நொச்சிக்குளம்" சந்திரன் பதிலளிக்கின்றான். பார்க்க வீடுகள் எல்லாம் நல்லா இருக்குது. "யாழ்ப்பாணத்து வீடுகள் மாதிரி இல்லையா?" இரவினுள் தெரிந்ததை வைத்துக்கொண்டு கதைக்கிறான். ஓமண்ணை "இந்தமக்கள் தனியத்தோட்டம் செய்துதான் முன்னேறினவையள். எவ்வளவு கஸ்ரப்பட்டு தலைமுறை தலைமுறையாகக் கட்டின வீடுகள். ஒரு நாளில் போட்டது போட்டபடி கிடக்க விட்டுட்டுப்போக வேண்டியதாகப் போய்விட்டது."

அப்பொழுது பக்கத்தில கிளியறிங் செய்யப்போன அணியினர் வந்து வீடுகளினுள் சென்று இரவு தங்கும்படி சொல்கிறார்கள். சத்தம் எழுப்பக்கூடாது.

ரோச்சை அடிக்கக்கூடாது. வெட்டையில் நடமாடக்கூடாது. தப்பித்தவறி அவன்ற ரெக்கிக் காரங்கள் கண்டு அறிவிச்சாங்கள் என்றால், எல்லாரையும் செல்லாலையே புக்கையாக்கி போடுவாங்கள். மீண்டும், மீண்டும் அறிவுறுத்தப்பட்டு வீடுகளினுள் அனுமதிக்கப்படுகின்றார்கள்.

அப்படி இருந்தும் ரோச்சை கையால் பொத்திப் பிடித்து அடித்தபடியே பெரிய கல்வீடு ஒன்றினுள் செல்கின்றார்கள் தூசி மணம் நாசியை அடைக்கிறது. சிலந்தி வலைகள் முகத்தில் அப்பிக்கொள்கின்றது.

தளபாடங்கள் எல்லாம் கிடக்கின்றன. மேசை ஒன்றில் ஆடைகள் சிதறிக்கிடக்கின்றன. மக்கள் இல்லாததால் பாழடைந்தவீடுகளுக்கு உதாரணமாகக் காட்சியளிக்கின்றது. இந்த வீட்டினைக்கட்டும் போது எவ்வளவு கனவு கண்டிருப்பார்கள்! என எண்ணியபடி அண்ணார்ந்து பார்க்கின்றான். யாழ்ப்பாணத்து வீடுகளிலும் பார்க்க அறைகள் கட்டப்பட்டு உள்ளன. ஏன் இப்படிக்கட்டியிருப்பார்கள், யாரிடம் காரணம் கேட்கலாம்? யோசித்தான். ஏன் இவற்றைக்கதைத்து நேரத்தை வீனாக்குவான்? படுப்பம் என நினைத்தவன் கீழேகிடந்த புடவை ஒன்றை எடுக்கின்றான். ஏனோ தெரியவில்லை மணந்து பார்க்கின்றான். பூஞ்சன மணம் அடிக்கின்றது. அவனுக்கு வீட்டு ஞாபகம் வருகின்றது. பெற்சீற் விரித்தாலும் அம்மம்மா பாவித்த நூல் பிடவை இரண்டு விரித்தால்தான் படுப்பான். அதுவும் அம்மாதான் விரித்துவிட வேண்டும். அம்மம்மா செத்தபிறகும் கனகாலம் அப்படித்தான் இருந்தான்.

வீட்டினுள் படுக்க வெக்கையாக இருக்கிறது. வெளியால காத்து வீசுகிறது நல்லா இருக்கும். பாரம் சுமந்தபடி நடந்து வந்ததால் உடல் சூடாகவும் களைப்பாகவும் இருக்கின்றது. மெல்லிய காற்று மேனியை வருடிவிட இதமாக இருக்கிறது. வீட்டில் எடுத்து வந்த புடவையை நிலத்தில் உதறி விரிக்கின்றான். இடுப்பில் பெல்ட் மாதிரி மடித்துக்கட்டியிருந்த சறத்தை அவிழ்த்து அதன் மேல் விரிக்கின்றான். ரைபிளை அதன்மேல் வைத்துவிட்டு அருகில் படுக்கின்றான். இவனுக்கு அருகில் ஒரு புறம் சந்திரனும் மறுபுறம் மிரேசும் படுக்கின்றனர். சிறிது நேரத்திலேயே நித்திரையில் மூழ்கி விட்டான்.

திடீரென உடல் குளிரத்தொடங்கியது. களைப்பு மாறி உடல் சூடு தணிந்தவுடன் குளிரை உணரக்கூடியதாக இருக்கிறது. அத்துடன் நுளம்பு கடித்த இடங்கள் தடித்திருந்தது. நுளம்புக்கடியையும் குளிரையும் தவிர்ப்பதற்கு

இப்போது இருக்கும் ஒரேவழி நிலத்தில் விரித்திருக்கும் சாறத்தை எடுத்து அதனுள் புகுந்து உடலை வினாக்குறிபோல் குறுக்கிப்படுப்பதே 'சே' வீரன் நிமிர்ந்து தான் படுக்கவேண்டும். வினாக்குறிபோல் குறுக்கிப்படுக்கடாதாம் புறநானூற்றில் கூறப்பட்டிருக்காம். அப்ப நான் வீரன் இல்லையா? இப்ப எனக்கு நானே வீரன் என நிரூபிக்க வெளிக்கிட்டால் நட்டத்தில்தான் முடியும் என்று நினைத்தவன் அவ்வாறே சறத்தினுள் புகுந்து படுக்கின்றான்.

நித்திரை வர மறுத்து பள்ளியில் ரீச்சர் சொன்ன கதை ஞாபகம் வருகிறது. துட்டகைமுனு இப்படித்தான் முடங்கிப்படுத்துக் கிடந்தவனாம். அப்பொழுது தாய் கேட்டாவாம் ஏன் மகன் நீட்டி நிமிர்ந்து படுக்கலாம் தானே என. அதுக்கு அவன் எப்படியம்மா படுக்கிறது? வடக்கில் தமிழன் ஆளுகின்றான். தெற்கில் கடல் கிடக்கிறது. அதன் பின்னர் எல்லாள மன்னனோட சண்டை பிடித்து அனுராதபுரத்தைக் கைப்பற்றினவன். எல்லாளன் பொருத்தமற்ற முறையில் தன்ர வீரத்தையும் தயாளகுணத்தையும் நிரூபிக்க வெளிக்கிட்டு தன் தேசத்தையே தோல்வியுறச் செய்து விட்டான். இளைஞனான துட்டகைமுனுவுடன் வயோதிபனான தான் தனியச் சண்டை பிடிக்க ஒப்புக்கொண்டது பெரியபிழை.

அதனால்தான் இப்ப நாங்கள் கஸ்ரப்படுகிறம். இப்படித்தான் எங்கட மன்னர்கள் வீரம் அது இதுவெண்டு காலத்திற்கு ஒவ்வாத மரபுகளுடன் போர் புரிய வெளிக்கிட்டு முதுகில் வாங்கினவையள். அலை பாய்ந்த மனதை நித்திரைக்கு கொண்டு வர வேண்டி இருந்தது. இல்லாவிட்டால் நாளைக்கு கஸ்ரப்படவேண்டும். இரவில் தூக்கம் வராதவர்கள் ஒன்று இரண்டு எண்ணிக்கொண்டிருக்க நித்திரை வருமாம் கேள்விப்பட்டது ஞாபகம் வர எண்ணத் தொடங்குகிறான். அவனை நித்திரா தேவி அணைத்துக் கொள்கிறாள்.

"அண்ணை எழும்புங்கோ" சந்திரன் தட்டி எழுப்புகிறான். நேரம் 5.30 ஒவ்வொரு போராளியாக துயிலெழுந்து கொண்டிருக்கின்றார்கள். அவன் மனம் வெறுமையை உணர்கின்றது. காலையில், துயிலெழுப்பவேண்டிய சேவல்கள் கூவவில்லை. காகங்கள் கரையவில்லை குயில்கள் கூவவில்லை. ஆட்கள் இல்லாவிட்டால் சேவல்கள் இருக்கமுடியாதுதான் ஆனால் காகங்களும் காணாமல் போய்விட்டனவா? என்னண்ணை எழும்பி யோசித்துக்கொண்டிருக்கிறியள். வெளிக்குப் போற ஐடியா? இல்லையா? இங்கு எல்லாம் ஏ.சி லெட்தான் போயிட்டு வருவம் வாங்கோ! சந்திரன்

அழைக்க மிரேஸ் கூறுகின்றான். அண்ணை காஞ்சோண்டிக்கதை தெரியும் தானே? இவனும் சிரித்தவண்ணம் ஓம் என்கின்றான். கவனம் படக்கூடாத இடங்களில் பொட்டமாக் பட்டுவிட்டால் பிறகு கரைச்சலாகப் போயிடும். கரிசனையாக எச்சரிக்கின்றான். காஞ்சோண்டிக் கதை தெரியும் ஆனால் அது எவ்வாறு இருக்கும் எனத்தெரியாது. கதைத்தபடி பற்றைகள் நோக்கிப் போனார்கள்.

ஒருவன் தென்னையொன்றில் ஏறி இளனிகளை மழ மழவென காலால் உதைத்து வீழ்த்துகின்றான். நேற்று வெளியில் கன நேரம் நடந்ததால



வியர்வை ஆவியாகி உடலில் நீரினைக் குறைத்து விட்டது. அதனால்தான் சிறுநீரின் செறிவு அதிகரிக்க ஒவ்வொரு முறையும் சிறு நீர் கழிக்கும் போது சலக்கடுப்பு உயிரை வாட்டுகிறது. இளனி குடித்தால் நன்றாக இருக்கும் மனம் எண்ண, கால்கள் இளனிகளை நோக்கி நடக்கின்றன. அது சரி தடயம் விடக்கூடாது என்று ஓடர் .இளனியைக்குடித்துப்போட்டு கோம்பையை ஒளித்தால் சரிதானே தன்னுள் எண்ணிக்கொண்டபடியே இரண்டு இளனிகளை எடுக்கின்றான். தடி ஒன்றினால் ஓட்டை போட்டு குடிக்கிறான். வேறு சிலரும் அவ்வாறு செய்கின்றார்கள். விடிய வெள்ளன ஆறுமணிக்கு இளனி குடிப்பது

தன் வாழ்நாளில் இதுதான் முதன் முறையாக இருக்குமென எண்ணி நிற்கின்றான்.

போராளிகளுக்கு உடனே தயாரிக்கக் கூடியதாக அவலும் பால்மாக்களும் மதியத்திற்கும் இரவுக்குமாக உணவுப் பார்சல்கள் வழங்கப்படுகின்றன. ஆனால் பிறம்பாக சீனி வழங்கப்படவில்லை காலையில் ரீ குடிக்காவிட்டால் ஒரு மாதிரியாக இருக்கும் ஒருவன் கூற மற்றவர்களும் ஆமோதிக்கின்றார்கள். சந்திரன் சொல்கின்றான். அவல் பக்கற்றின் ஒரு மூலையில் சீனி புறம்பாக இருக்கும். அதனைப்பிரித்து எடுத்தால் ரீ போடலாம் உடனே அவ்வாறு செயற்படுகின்றார்கள்

.

அவ் வீட்டில் இருந்த பானை ஒன்றை எடுத்து அடுப்பில் வைத்தார்கள். அருகில் இருந்த அரிக்கன் லாம்பை எடுத்து, சரிக்க அதிலிருந்து சிறிதளவு மண்ணெண்ணெய் வந்தது. அதனைக்கொண்டு அடுப்பு மூட்டுகின்றார்கள். இவர்கள் ரீ போட்டுக்குடிக்க. மற்ற குறூப்காரர் ஆச்சரியத்துடன் பார்த்தார்கள். அவர்கள் பால்மாக்களை கையில் கொட்டி சாப்பிட்டவண்ணம் இருந்தார்கள். நீங்களும் இப்படிச்செய்திருக்கலாம் தானே! அரிய கண்டுபிடிப்பு ஒன்றை விளங்கப்படுத்தும் குட்டிப்பெருமையொன்று இவனின் குரலில் தென்படுகிறது.

ரைபிள்கள் துப்பரவு செய்து கொண்டிருக்கின்றான். பொறுப்பாளர் சொல்கிறார் எல்லோரும் மாறி மாறி நித்திரை கொள்ளவேண்டும். 11 மணியளவில் மீண்டும் நடக்கத்தொடங்கவேண்டும். மீண்டும் நடப்பதை யோசிக்கவே ஒரு மாதிரியாக இருக்கிறது. அதனால் அதனைப்பற்றி அதிகம் யோசிக்காமல் படுக்கப்போகின்றார்கள். ஆனால் நித்திரை வரமாட்டேன் என்கிறது. என்ன செய்யலாம் அவன் யோசித்துக்கொண்டிருக்க கிணத்தடியில கயிறோட வாளிகிடக்குது. குளிக்கலாம் ஒருவன் சொல்வது கேட்க இவனும் கிணற்றடிக்குப் போகிறான்.

வேர்வையில் தோய்ந்து காய்ந்து வெள்ளைக்கோடுகள் படிந்திருந்தது. ஜீன்சையும் சேட்டையும் தோய்த்துப் போடுகின்றான். முதல் வாளி நீர் உடலில் பட பரமசுகமாக இருக்கிறது. முந்தி வீட்டில குளிக்கிறது........ என்றால் படுகள்ளம். அப்பா குளிக்கக் கூப்பிட்டால் வீட்டைச்சுத்தி ஓடுறனான். அருகில் நின்ற போராளி கூற ஏன் இப்பமட்டும் பேசில ஒழுங்காக் குளிக்கிறியோ? உனக்குத் தண்ணியெண்டால் அலேர்ஜி தான். இன்னொருவன் கூற முதலாமன் ஒருவாளி தண்ணியை அள்ளி அவனை நோக்கி எத்துகின்றான். அவர்கள்

அப்பிரதேசம் ஆபத்தானது என்பதையும் மறந்து கலகலப்பாகின்றார்கள். சந்திரன் அவல் குழைத்துக்கொண்டிருந்தான். டேய் கூழானாலும் குளித்துக்குடி இது கூழ் அல்ல அவல் என அவர்கள் சம்பாசனை தொடர்கின்றது.

குளித்து முடித்துவிட்டு இவன் வீட்டினுள் வரும்போது ஒரு சீப்புக்கும் கண்ணாடிக்கும் பலர் சண்டைபோட்டுக்கொண்டு இருக்கிறார்கள். ஒருத்தரும் தலை இழுத்த பாடும் இல்லை முகம் பாத்தபாடும் இல்லை பொறுப்பாளர் வந்து ஒவ்வொருத்தராய்ப் பாருங்கள் எனக்கூறிய பின்னர்தான் ஒழுங்கிற்கு வந்தார்கள். இரவு சண்டையில் எத்தனை பேருக்கு முகம் கிழியுதோ தெரியவில்லை வடிவாகப் பாருங்கோ?

டேய் அபசகுணமாய் கதைக்காத சாகலாம் பிரச்சனை இல்லை ஆனால் முகம் வடிவாக இருக்கவேணும். நான் பதினாறு வயதில இருக்கேக்க ஒரு நாளுக்கு எத்தனை மணித்தியாலம் கண்ணாடிக்கு முன்னால செலவழிக்கிறனான் உனக்குத்தெரியுமா? அது கிடக்கட்டும் இப்ப உயரத்தைச் சொல்லு எத்தனை அடி? ஏன்? பெட்டிக்கு அளவு கொடுக்கத்தான். டேய் நல்லதாய்க் கதையுங்கோ. அவர்கள் ஏதாவது கதைத்துச் சிரித்த வண்ணம் தான் இருப்பார்கள்.

கண்ணாடியில் முகத்தைப்பார்த்த வண்ணம் கண்ணன் தன்னுள் யோசிக்கின்றான் . 'சே' இந்தப்பள்ளங்களை உருவாக்கி ஒவ்வொரு முகப்பருவும் எவ்வளவு கவலையைக்கொடுத்திருக்கும் மனச்சாட்சி இல்லாத பருக்கள். பருக்களை திட்டிய வண்ணம் கன்னத்தை ஒரு தரம் தடவிப்பார்க்கின்றான். சவரம் செய்து மூன்று நாட்கள் ஆகிவிட்டது.

இப்படித்தான் 1992 ல் புல்லாவெளியில் நடந்த சண்டையில் இரண்டு ஆமிக்காறங்கள் பிடிபட்டவங்கள். இப்ப இருந்த விசேட தளபதி இரவு அவங்கட முகத்தையும் எங்கட முகத்தையும் ரோச் அடித்துப்பார்த்துவிட்டு சொன்னவர் இவங்கட முகத்தையும் உங்கட முகத்தையும் பாருங்கோ எவ்வளவு கிளீனாக இருக்கிறாங்கள். நாளைக்கு முதல் வேலையாக எல்லாரும் சேவ் எடுங்கோ! இராணுவத்திற்கு தோற்ற ஒழுக்கமும் மிகவும் முக்கியமானது என்று கூறினார். இவர்தான் இப்ப அரசியல்துறைப் பொறுப்பாளர். அவர்கள் புறப்படுவதற்கு முன்னர் களமுனைக்கு வந்து சந்தித்து வாழ்த்தி அனுப்பினவர். அப்பொழுது சொன்னவர் உங்களுக்கு சொல்லக்கூடியது எவ்வளவுக்கெவ்வளவு

உயிரிழப்பைத் தவிர்க்க ஏலுமோ அவ்வளவுக்கவ்வளவு வெற்றிச் சூழ் நிலைகளுக்கு ஏற்றபடி முடிவெடுங்கள். இந்த முறை மருத்துவக்குழுவில் ஜெனரல்களையும் அனுப்புறன். என களமருத்துவர்களை சற்று மேலதிகமாக புகழ்ந்து உற்சாகமூட்ட முயற்சித்தார். எது எப்படியோ உயிரிழப்பை தடுக்கக்கூடிய வசதிகளுடன் தான் மருத்துவ அணி நகர்க்கிறது என்பது போராளிகளுக்கு உற்சாகம் கொடுக்கும் விடயம் என்பதை முற்று முழுதாக நம்பினார்கள். ஆதலால் இயன்றளவு வடிவாகச் செயற்பட வேண்டும் என உறுதி எடுத்துக்கொண்டார்கள்.

"என்ன கண்ணாடியைப் பார்த்துக்கொண்டு கனக்க யோசிக்கிறியள"? கூறியபடியே அவன் கண்ணாடியை வேண்ட, இவன் இவ்வுலகத்திற்கு வந்தான்.

ஏனோ அவன் தன் எண்ணங்களை விரட்ட முயற்சிக்கின்றான். மனதை உருக்கும் சோகங்களை மற்றவர்களிற்கும் சொல்ல விரும்பவில்லை. ஏனெனில் ஒவ்வொரு போராளியின் மனமும் ஆழமான சமுத்திரம் அதன் அடியில் பல சோகங்கள் மண்டிக்கிடக்கும் ஆனால் வெளிப்பார்வையில் சில வேளைகளில் நந்தவனமாகவும் குளிரோடையாகவும் காட்சியளிப்பார்கள். பழகுவார்கள் அவர்களின் உணர்வுகளை புரிந்தவர்களால் மட்டுந்தான் இவர்களை தெரிந்து கொள்ளமுடியும்.

தன் எண்ணங்களிற்கு விலங்கிடமுனைந்து தோற்றதால் எழுந்து வீட்டினுள் செல்கின்றான். ஒவ்வொரு அறையாக ஆராய்கின்றான். ஒரு அறையினுள் வெற்றிக்கிண்ணங்களும் கேடயங்களும் தாறுமாறாகக் கிடக்கின்றன அதிலொன்றை எடுத்துப்பார்க்கின்றான். கரப்பந்தாட்டம் ஒன்றில் வெற்றி பெற்றமைக்காகக் கொடுக்கப்பட்டுள்ளது. ஆம் இவை 'சோக்கேசில்' வைத்து அழகுபார்த்து பெருமைப்படவேண்டியவை ஆனால் இப்பொழுது புழுதிபடிந்து கிடக்கின்றன. இதனை பெறுவதற்காக உரியவன் எவ்வளவு பயிற்சி பெற்றிருப்பான். வெற்றிக்கேடயங்களை எல்லோர் முன்னிலையிலும் வாங்கும் போது எவ்வளவு பெருமைப்பட்டிருப்பான். இப்பொழுது இவன் எங்கிருப்பான்? சிலவேளை இயக்கத்தில் சேர்ந்திருப்பானா? காலத்தின் கையிலிருந்து தமிழீழத்தின் வெற்றிக்கேடயத்தைப்பெற முயற்சித்துக்கொண்டிருப்பானா? அல்லது அகதியாக எங்காவது அலைந்து திரிந்துகொண்டிருப்பானா, மனம் பலவாறு எண்ணமிட்டது. அப்பொழுது ஒருவன் வந்து வெற்றிக்கிண்ணத்தை வாங்கினான். "நல்ல சாமான் ரீ குடிக்க கப்

இல்லையென்று தேடித்திரிஞ்சனான்." எனக்கூறியபடியே வெளியில் சென்றான்.

இவன் அடுத்த அறையினுள் சென்று பார்க்கின்றான். கொண்டு போகமுடியாது விடப்பட்ட மிகுதி நெல்மூட்டைகள் தாறு மாறாக்கிடக்கின்றன. அவற்றில் ஒன்று அவிழ்ந்து தரையினுள் சிந்திவிட்டிருந்தது. அவை முளைத்து நாலு அங்குலம் வளர்ந்து இருந்தது. வயலில் விளைய வேண்டியவை வீட்டினுள் முளைத்து நிற்கின்றன. இன்னும் சில நாட்களில் அவை இறந்து விடும். என்னசெய்வது காலம் உங்களை சிறையில் இட்டுவிட்டது. உங்கள் உரிமையாளர் உங்களிற்காக எவ்வளவு கஸ்ரப்பட்டிருப்பார். உரவகை மண்ணெண்ணெய் இல்லாமல் உளளூர்வளங்களைப் பயன்படுத்தி உங்களை விளைவித்திருப்பார்கள் இவன் இவைகளிற்காக பரிதாபப்படுகின்றானா? அல்லது வீட்டுக்காரருக்காக பரிதாபப்படுகின்றானா? அவனுக்கு விளங்கவில்லை இப்போது விளங்கியது ஏன் இங்குள்ள அறைகள் அகலமாகவும் உயரமாகவும் கட்டப்பட்டுள்ளது என்று நெல் மூட்டைகள் களஞ்சியப்படுத்துவதற்குதான். அப்பொழுது வெளிவிறாந்தையில் பலர்சேர்ந்து கொல் எனச்சிரிக்கும் சத்தம் கேட்டது. வெளியில் சென்று எட்டிப்பார்க்கின்றான். விசயம் விளங்கியது.

போராளி தான் கொண்டுபோன வெற்றிக்கிண்ணத்தினுள் தேனீரைக்குடித்து விடடு மிகுதியை படுத்திருந்த குமணனுக்கு பக்கத்தில் வைத்துவிட்டான். அதனை படுத்திருந்தபடியே எடுத்துப்பார்த்த குமணன் அதற்குள் தேனீர் இருப்பதை அறியாமல் கவிட்டுப்பார்க்க அது முகத்தில் சிந்தி அங்கிருந்தவர்களிற்கு சிரிப்பு வந்துவிட்து 'எங்கடயாக்களிற்கு எங்கபோனாலும் விளையாட்டுத்தான்!' ஒருவன் பொறுப்புள்ளவனாக கதைப்பது கேட்கின்றது. அவன் வீட்டின் முகட்டை அண்ணார்ந்து பார்க்கின்றான். சிறிய மின்குமிழ் பல்புகள் மாதிரி பல உருண்டைகள் தீராந்தி மரங்களில் தொங்குகின்றன. வடிவாக உற்றுப்பார்த்து தெரிந்து கொண்டான். அவை சிறிய வெளவ்வால் இன்னும் சில நாட்கள் சென்றால் போதும் இவ்வீடு வெளவ்வால்களினதும் ஆந்தைகளினதும் வசிப்பிடம் ஆகிவிடும்.

அப்பொழுது சந்திரன் வந்து "அண்ணை! சாப்பிடவாங்கோ" எனக்கூப்பிட எல்லோரும் அவனிடம் செல்கின்றார்கள், பெரிய பானையில் சோறும் தாச்சி ஒன்றில் ரின் மீன் கறியும் வைத்திருக்கின்றார்கள். எல்லாவற்றையும் ஒன்றாகப்போட்டுக் குழைத்தார்கள். சந்திரன் கவழம் கவழமாக கையில்கொடுக்க எல்லோரும் ருசித்துச்சாப்பிட்டார்கள். பலபோராளிகள்

ஒருவருக்கு ஒருவர் இன்றுதான் அறிமுகம் ஆனார்கள். ஆனால் அவர்களிடையே அன்னியத்தன்மை எதுவும் தெரியவில்லை. ஏதோ ஒருவகையில் நெருக்கமான உறவை வெளிப்படுத்தினார்கள். ஆம் சாவயல்களில் சாதனைப்பயிர் வளர்பபவர்களிடையே இயல்பாகவே இருக்கின்றது. பல இடங்களில் சொந்தச் சகோதரங்களிடையேயே இவ்வளவு நெருக்கம் இருந்ததில்லையே! தங்கள் ஊரில் உறவினர்களிற்கிடையே காணிக்காரர்களினால் சண்டைவந்ததும் வருடக்கணக்காக கோடு கச்சேரி என ஏறி இறங்கியதும் பின் எல்லோரும் எதிரியிடம் நிலங்களை பறிகொடுத்து இடம்பெயர்ந்ததும் ஞாபகம் வந்தது. 'இதென்ன தேவையில்லாத ஆராய்சி சாப்பாட்டை ருசித்து சாப்பிடுவோம்' என தன் மனதை சாப்பாட்டினுள் செலுத்தினான்.

சாப்பிட்டு எல்லோரும் சிறு சிறு குழுக்களாக பிரிந்து அலட்டத்தொடங்கினார்கள். சிலர் தென்னோலைகளை எடுத்துப்போட்டு உறங்கத்தொடங்கினார்கள். "மச்சான் உண்ட பின் நூறடி உலாவுதல் நன்று பழமொழி சொல்லுது புதுமொழி சொல்வது தெரியுமா?" "சொல் பார்ப்பம்" "உண்ட உடன் உறங்குதல் நல்லது."

"மச்சான் நீ எந்த இடம்? 'தீவு', "தீவா! "ஏன் தீவு என்றவுடன் ஒருமாதிரி இழுக்கிறாய்?" உனக்கு தீவானுக்கு புகையிலை வித்த கதை தெரியுமா?" "என்ன கதை?" கதையைச்சொல் எல்லோரும் வாய்விட்டு சிரித்தார்கள். "மச்சான் உனக்கு வாகனம் ஓட்டத்தெரியுமா? எவ்வளவு தெரியும்?" "ஏன்?" "இல்ல போனமுறை றைவர்கள் இல்லாததால கனக்க வாகனங்கள் கிடைச்சும் விடவேண்டியதாச்சு இந்த முறை அப்படி விடக்கூடாது. சந்தர்ப்பம் கிடைத்தால் றைபிள் எடுக்காட்டியும் பரவாயில்லை வாகனம் எடுத்துக்கொண்டு வந்திட வேணும். காயக்காறரை ஏற்ற உதவும்" "அது சரி சாவி இல்லாவிட்டால் என்ன செய்வது?" சின்னப்பிரச்சனை லொக்கை உடைத்துப்போட்டு வயரை முட்ட ஸ்ராட்வரும். அவர்கள் மிகவும் ஆபத்தான பிரதேசத்தில் இருப்பதையும் மறந்து இன்றிரவுடன் சிலர் இல்லாமல் போய்விடுவார்கள் என்பதனையும் மறந்து ஏதாவது ஒன்றைப்பற்றிக் கதைக்கின்றார்கள். அப்பொழுது ஒருவன் வந்து சொல்கின்றான் "அண்ணே! சத்தியப்பிரமாணம் தொடங்கப்போகுது எல்லோரையும் வரட்டாம்."

இவர்கள் வீட்டு முற்றம் தாண்டி வீதிக்கு வருகின்றார்கள். கண்கொள்ளாக் காட்சிதனைக் காண்கின்றார்கள். ஆம் போர்முகத்தேறிப்

புயலென வீசப்போகும் பலநூறு ஆயுதம் தரித்த போராளிகள் மைதானம் நோக்கி விரைந்து கொண்டிருக்கின்றார்கள். வரிப்புலிச் சீருடையணியினது கறுப்புநிற இராணுவப் பாதணிகள் மினுமினுக்க, நிமிர்ந்த நடையும் நேர்கொண்ட பார்வையுமாகச் செல்கின்றார்கள். இடையில் கட்டப்பட்டிருக்கும் இராணுவப்பட்டியே அவர்களில் ஆண், பெண் போராளிகளை வேறுபடுத்துகின்றது. நெஞ்சுக்கோல்சர், அதில் உயிர்குடிக்க ஆவலாய்த்தொங்கிக்கொண்டிருக்கும் கைக்குண்டுகள், கரங்கள் இறுகப்பற்றியிருக்கும் சிறுரக, கனரக ஆயுதங்கள, காயமடைந்தவர்களை காவுகின்ற ஸ்ரெச்சர்கள், களமுனை வினியோகத்திற்கென கொண்டு செல்லப்படும் மேலதிக ரவைப்பெட்டிக்ள், முதுகில் காணப்படும் தொலைத்தொடர்புக்கருவிகள் என ஒரு சிறு படையணித்தளமே நகர்ந்த வண்ணம் உள்ளது. இடம் நொச்சிக்குளம் வித்தியாலயம் முன்பாக.

அணியணியாக புலிவீரர் அணிவகுத்துள்ளனர். முன்நிற்கும் அணித்தலைவர்களைத் தொடர்ந்து போராளிகள் நிரைகளாக நின்றார்கள். எண்ணும்பொழுது ஆயிரம் தாண்டும். பார்க்கப், பார்க்க உள்ளம் பூரிக்கிறது. மண்ணை ஆக்கிரமித்து நிற்பவனுக்கு மரண அடி கொடுக்கத்தவித்துக் கொண்டிருக்கும் இவர்களில் பலர் திரும்பிவரப்போவதில்லை. பலர் அங்கங்கள் இழக்கப்போகின்றார்கள், சிலர் முன்னான் சிதைந்து இயங்கமுடியாமல் போகப்போகின்றார்கள். இவைதான் போரின் யதார்த்தம். இதனை அனுபவங்களினூடாக உணர்ந்தவர்கள் களம் நோக்கி விரைகின்றார்கள்.

ஆகுதி நெய்யைத்தம்மில் வார்த்து வெண்தீயில் குதிக்கப்போகின்றார்கள் விடுதலையை விரைவாக்க முனையும் ஒவ்வொரு தடவயும் தலைமை தவிக்கும் ஏனோ “வெடிசுமந்துபோகும் வேங்கை இடிமுழங்கும் போகவிடை கொடுத்த பெருந்தலைவன் விழிகலங்கிடும்” பாடல்வரிகள் நினைவில் வந்து இவன் இதயத்தை பிழிகின்றது.

ஒரு போதும் இம்மண் அந்நியனுக்கு அடிபணியாது இதனை இந்திய இராணுவமும் ஒரு முறை பட்டுஉணர்ந்தது. அதனைச்சிங்களப் பேரினவாதம் விளங்க மறுக்கிறது. இதனை பகைவன் விளங்கும்வரை இம்மண்ணை விட்டு அவன் விலகும்வரை, என்ன விலையேனும் கொடுக்கப்பட்டுக்கொண்டே இருக்கும். இவன் சுயம் மறந்த நினைவில் நினைக்கையில் மீண்டும் அதேகுரல் “என்ன டொக்டர் கனக்க யோசிக்கிறியள்? சத்தியப்பிரமாணம்

தொடங்கப்போகுது. நான் வாறன் அதுக்கு முதல் ஒண்டு சொல்லுறன் நான் பலபேருக்கு பாடினான் எனக்குப் பாடுறாங்களோ தெரியாது. காயப்பட்டு வந்தால் வடிவாகக்கவனியுங்கோ" சொல்லிச்சிரித்தவன் கைகுலுக்கி விடைபெற்று தன் அணி நோக்கி விரைகின்றான். இவனிற்கு அறிமுகமான ஒவ்வொரு போராளியும் கடக்கும்போது ஓடிவந்து கைகுலுக்கிவிட்டுப் போகின்றார்கள்.

மாவீரர்களுக்கும் போரின்போது கொல்லப்பட்ட மக்களுக்குமாக அக வணக்கம் செலுத்தப்படுகின்றது. தொடர்ந்து பேரணி.... சீராய் நில் எமது புரட்சிகர இயக்கத்தின்.... ஊறுதியுரை சொல்லப்படுகின்றது. இறுதியில் "புலிகளின் தாகம் தமிழீழத்தாயகம்" என அனைவரும் ஒத்த குரலில் ஓங்கியொலிக்கின்றார்கள். அனைவரும் தோளின்மேலாக துப்பாக்கிகளை உயர்த்தி உறுதி எடுக்கையில் மெய்சிலிக்கின்றது. உள்ளம் இறுகியது. அணையுடைத்துப்பாயும் பெரும் வெள்ளத்தின் இரைச்சலென அவ்வுறுதியுரை காதினுள் ரீங்காரம் செய்தவண்ணம் உள்ளது. ஆயிரம் புலிகள் ஒன்றாய் உறுமுவதாய் காட்சி விரிகிறது.

தொடர்ந்து களமுனைத்தளபதி கேணல் தீபன் அவர்கள் அணிகளை போரிற்கு ஆற்றுப்படுத்தும் உரையினை ஆற்றினார். "நாங்கள் மிகப்பெரிய நகர்வினை இதுவரை எவ்வித இடர்களும் இல்லாமல் செய்து விட்டோம். மற்றப்பக்கமும் இதுவரை ஒரு பிரச்சனையும் வரவில்லை. இனித்தான் நாங்கள் மிகவும் கவனமாக இருக்க வேண்டும். இதுவரை எதிரியின் நடமாட்டம் உள்ள பகுதியினுள்ளதான் நகர்ந்தனாங்கள். இனித்தான். அவனின் உயர்பாதுகாப்பு வலயத்தினுள் ஊடுருவப்போகின்றோம். எங்களில் ஒருவர்விடும் சிறுதவறே பாரிய அழிவினைக்கொண்டு வந்துவிடும். எனவே ஒவ்வொருவரும் கவனமாகவும் நிதானமாகவும் செயற்படவேண்டும், உங்கள் உங்களிற்கென தரப்பட்ட பணியினை நீங்கள் ஏற்கனவே விளங்கப்படுத்தியமாதிரி திறமையாகச்செய்து முடியுங்கள். நாங்கள் ஏற்கனவே அவனுக்கு இருதரம் அடி கொடுத்துள்ளோம். பாரிய அழிவுகளை ஏற்படுத்தியுள்ளோம்.இம்முறையும் வெற்றி பெறுவோம். பல கனரக ஆயுதங்களை எடுக்கக்கூடியதாக இருக்கும். ஆயுதங்களையும் கைப்பற்ற முயற்சி செய்யுங்கள். முடியாதவிடத்து அவற்றை பயன்படுத்த முடியாதவாறு அழித்துவிடுங்கள். போனமுறை நடந்த தவறு ஒன்றைச்சுட்டிக்காட்டுகின்றேன். தண்ணீர்த்தொட்டியொன்றைச் சுட்டுவிட்டு வந்தனாங்கள். அவன் இப்ப அதில் இருந்த ஓட்டைகளை அடைத்துவிட்டுப் பயன்படுத்துகின்றான். நாங்கள் பின்வாங்கினாலும் எப்பொருளையும் அவன்

மீளப்பயன்படுத்த முடியாதவாறு அழிக்க வேண்டும்.

இன்னொரு விடயம் சண்டையில் கொல்பவன் வெல்வான் அண்ணை அடிக்கடி சொல்லுறவர். முடிந்தளவு அழிவுகளை ஏற்படுத்துங்கள் எங்களுக்கு வெற்றி நிச்சயம். எங்கள் மண்மீட்கப்படுவதற்கும், இந்த ஜெயசிக்குறு இராணுவ நடவடிக்கை தோல்வியில் முடிவடைவதற்கும் இதுவொரு பலமான காரணியாக அமையும். எங்களுக்குரிய கடமைகளை நாங்கள் சரியாகச்செய்து முடிக்கும்போது வெற்றி நிச்சயம் கிடைக்கும் ‘‘சென்றுவருவோம் வென்றுவருவோம்.’’

அவரின் உரையைத்தொடர்ந்து ‘‘நன்றியண்ணா’’ என எல்லாப் போராளிகளும் உரத்துக் கூறினார்கள்.

இதுவரை இரட்டை வரிசையாக நகர்ந்து வந்த படையணி இப்பொழுது ஒற்றை வரிசையில் நகரத்தொடங்கியது. இவன் சகபோராளிகள் சிலருடன் ஒரு ஓரமாக நின்று கடந்து செல்லும் ஒவ்வொரு போராளியினது முகத்தினையும் பார்க்கின்றான். தெரிந்தவர்கள் தெரியாதவர்கள் அனைவரும் " அண்ணை " போயிற்று வாறம் என புன்சிரிப்புடன் கூறி விடைபெறுகின்றார்கள். அனைவரையும் வீடியோக்கமரா உள்வாங்குகின்றது.

போராளிகள் தங்கள் உபகரணங்களுடன் நகர அவ்வீதியில் தூசிமண்டலம் படர்கின்றது. தமிழீழத்திற்கான [illegible] படை நகர்ந்து கொண்டிருக்கின்றது. தலைவர் போராட்ட ஆரம்ப காலங்களில் சொல்வாராம் ‘‘தனக்கு ஒருநூறு போராளிகளையாவது சீருடையில் பார்க்க ஆசையாக உள்ளது என’’ இன்று ஆயிரத்திற்கு மேற்பட்டவர்கள் தமிழ்த் தேசிய இராணுவத்திற்கான வரிப்புலி சீருடையில் அல்லவா சென்றுகொண்டு இருக்கின்றார்கள்,

அடிவேண்டி அடிவேண்டியே பின்வாங்கிய திராவிடன், இன்று திரும்பவும் அடிக்கத்தொடங்கியுள்ளான். ஆயிரம் வருடங்களின் பின்னர் போரில் வெற்றிகள் குவிக்கின்றான். வரலாற்றுச்சக்கரம் சுற்றிக்கொண்டிருக்கிறது. காலம் இப்பொழுது எம்பக்கம், ஒவ்வொருவராக இவனைக்கடந்து செல்லும் போது இவன் மனம் சங்கடப்படுகின்றது. இவர்கள் முதலில் அடித்துப்பிடித்துக் கட்டவுட் போடுவதைப்பொறுத்துத்தான் இவர்களின் நகர்வும் அமையும். இறுதி

அணியினருடன் தளபதியும் விடைபெற்றுச் செல்கின்றார்.

மீண்டும் சிறு ஒழுங்கையினூடு வந்தவர்கள் பிரதான வீதியில் வந்து ஏறுகின்றார்கள். திடீரென வீதி வெறிச்சோடிக்கிடக்கின்றது. அமைதியான ஒரு உணர்வு ஆட்கொள்கின்றது. பலநூறு போராளிகள் பாதம் பட்டபுண்ணிய பூமி நாளைய வாரலாற்றில் சில வேளை இது பதிவாகலாம். எங்கும் ஒரே அமைதி

இவர்களின் காலடி ஓசைமட்டும் இவர்கள் காதுகளை எட்டுகின்றது. "போராட்ட வாழ்வில்தான் எவ்வளவு வித்தியாசமான அனுபவங்கள், சிலவேளை வெளியில் இருந்திருந்தால் இப்படியான அனுபவங்கள் கிடைத்திருக்காது. ஏதாவது ஒரு இயந்திர வாழ்வினைத்தேர்ந்து எடுத்திருப்பம்" தன்னுள் எண்ணியவண்ணம் மற்றவர்களுடன் முதலில் தங்கியிருந்த வீட்டை நோக்கிவருகின்றான்.

இவனுக்கு நேரம் போவதுமிகவும் கடினமாக இருக்கிறது. தனிமையில் யோசிக்கத்தொடங்கினான். சில நாட்களுக்கு முன்னர் நடைபெற்ற சம்பவம் ஒன்று இவன் எண்ணத்தை ஆக்கிரமிக்கின்றது."ஏனெடா மருத்துவப்பிரிவிற்கு வந்தேன்? " எனும் சலிப்பு எட்டிப்பார்க்கிறது.

நெடுங்கேணியில் பெரியமடு எனும் பகுதியில் அமைக்கப்பட்டிருந்த பிரதான மருத்துவ முகாமில் கடமையாற்றிக்கொண்டிருந்தான். அன்று அவனது பிறந்தநாள்.. ஞாபகமூட்டிய சகபோராளிகள் வாழ்த்தினையும் தெரிவித்தனர். ஆனால் அவனது மனநிலை அன்று நன்றாக இல்லை. முதல் நாள் இவர்களின் சுற்றாடல் எறிகணை மழையில் நனைந்திருந்தது. அவர்களின் பகுதியில் விழுந்து வெடித்த எறிகணையொன்று ராஜன் எனும் சாரதியைக் காயப்படுத்தி இருந்தது. நல்ல நகைச்சுவை நிரம்பியவன். சிறிது நேரத்திற்கு முன்தான் இவர்களுடன் இருந்து கதைத்துவிட்டுச் சென்றவன். ஐந்து யார் போயிருப்பான் எறிகனை ஒன்று தென்னைமர வட்டில் பட்டு வெடிக்க சிதறல் ஒன்று கழுத்துப்பகுதியில் அவன் முள்ளந்தண்டைத் தாக்கிவிட்டது. உடனடியாக இவனும் மற்றவர்களும் அவனை இழுத்துக்கொண்டு பதுங்கு அறையினுள் சென்று சிகிச்சை செய்தார்கள். அப்பொழுதே இவனுக்கு விளங்கிவிட்டது ஆளுக்கு இனி உடம்பின் கீழ் பெரும்பகுதி இயங்கமுடியாது என்று, ஆனால் அதனை அவனுக்கு உடனடியாகத் தெரிவிக்கவும் முடியாது. அவனை

மேலதிகச் சிகிச்சைக்காக பின்தளம் அனுப்பினான். அவனைப்பற்றி எவ்வித மேலதிக செய்தியும் கிடைக்கவில்லை. கடவுளே! அப்படி எதுவும் நடக்கக்கூடாது. கடவுளைப்பற்றிய கொள்கையில் தெளிவின்மை காணப்பட்டாலும் அவனது மனம் இவ்வாறு வேண்டுவது தவிர்க்க முடியாமல் இருக்கிறது.

"போராட்ட வாழ்வில் இதெல்லாம் சாதாரணமானவை ஏன் மற்றவர்களுக்கு அடிக்கடி ஞாபகமூட்டி மனநிலைகளை சோகத்தினுள் இழுப்பான்" என பேசாமல் இருந்துவிடுவான்.

"நாங்களும் எப்பவும் சாகலாம், இருக்கும் வரையும் சிரிச்சுப்பம்பலாக இருக்க வேணும்' என நினைத்து வலிய வந்து பகிடி விடுவான். மனிதனுக்கு நகைச்சுவையுணர்வு உண்மையாக இருக்க வேண்டும். பிறக்கும் போது அழுது கொண்டு பிறப்பவன், இறக்கும் போதும் அழுதுகொண்டே இறப்பவன். இருக்கும் போதாவது சிரித்துக்கொண்டு இருக்கவேண்டும்.

அடுத்த நாள் நயினாமடுப்பகுதியில் பாரிய சண்டை ஒன்று நடைபெற்றது. முன்னேற முயன்ற இராணுவத்திற்கும் தடுக்க முற்பட்ட புலிகளுக்கும் இடையில் ஏற்பட்ட சமரில் நான்கு பேர் காயப்பட்டனர். இவர்களின் முகாமிற்கு கொண்டுவரப்பட்டனர். எல்லாக் காயங்களுக்கும் தேவையான சிகிச்சையினைக்கொடுத்து பின்தளம் அனுப்பிவிட்டு ஓய்வு எடுத்துக்கொண்டிருந்தான். "மூன்று பொடி வந்திருக்கு" ஒருவன் கூறுவது கேட்க "சரிபோய்ப் பார்ப்பம் சாகவேண்டிய காயமா அல்லது முயற்சி செய்திருந்தால் காப்பாற்றி இருக்கலாமா!" என எண்ணமிட்டபடியே அவ்விடம் நோக்கி போகின்றான்.

மூன்று வித்துடல்களையும் பார்க்கும்போது மனம் கனக்கின்றது. ஆயினும் அதனைக் காட்டிக்கொள்ளாமல் காயங்களைப்பரிசோதிக்கின்றான். ஒரு பிள்ளைக்கு தொடை இரண்டும் சிதைந்துள்ளது. இன்னொரு பிள்ளைக்கு நெஞ்சில் பாரியகாயம். மற்றப்போராளிக்கு வயித்தில பாரிய காயம். குடல் வெளியில வந்து கிடக்குது. என்ன நினைத்தானோ தெரியாது முகங்களைப் பார்ப்பம் என எண்ணியவாறு மூடி இருந்த சாக்கை விலத்தினான்.

பேரிடியொன்று தலையில் வீழ்ந்த மாதிரி இருந்தது. நேற்று "அண்ணா!

என்ர பிறந்த நாள் வாழ்த்துக்கள் உரித்தாகட்டும்'' எனச்சொல்லிப் போனவள் இன்று பிணமாக வந்து கிடக்கிறாள். அந்த அதிர்ச்சியில் இருந்து மனம் விடுபட சில நிமிடங்கள் எடுத்தது. "செயலில் செயலின்மையையும், செயலின்மையில் செயலையும் காண்பவன் எவனோ அவனே யோகி" கீதை



சொல்கிறதாம். வாழ்வினில் இறப்பையும் இறப்பினில் வாழ்வையும் காண்பவன் எவனோ அவனே போராளி என்கிறது தமிழீழத்தின் யதார்த்த வேதம். இந்த நினைவுகள் எல்லாம் மனதைவிட்டு மறந்து போனால் எவ்வளவு நல்லா இருக்கும். சீ......... இப்படி நடக்கக் கூடாது. இவைகள் தானே எங்களுக்கு உந்துசக்தியாக இருப்பவை. அப்படியாயின் சோக நிகழ்வுகளை அடிக்கடி நினைக்க வேண்டுமா? வாழ்வின் அர்த்தம் என்ன? இவனின் மனம் தன்னுள் முடிவெடுக்கமுடியாத விவாதம் நடத்துகின்றது. தனியாய் இருந்தால் யோசனை பிடிக்கும். என எண்ணியதால் அருகில் பம்பல் அடிச்சுக்கொண்டிருக்கும் போராளிகளுடன் கலந்து கொள்ளுவதற்காக எழுந்து செல்கின்றான்.

மாலை ஆகிவிட்டது. எல்லோரும் முகம் கழுவி தேனீர் அருந்திவிட்டு

மீண்டும் படுத்திருந்தார்கள். சரியாக 10.30 க்கு சண்டை ஆரம்பிக்கும். சண்டை ஆரம்பித்தவுடன் இவர்கள் வாகனங்களில் புறப்பட வேண்டும். ஒவ்வொரு நிமிடமும் நீட்சிபெற்றுக் கழிவதாக உணர்கின்றான். இப்ப குறூப் "நைற்மூவ்" செய்யும், வழியில் L.P காரங்கள் கண்டிருப்பாங்களா? சீ.... அப்படி நடக்காது நடந்திருந்தா சண்டை குழம்பி இருக்கும். இப்ப சத்தம் கேட்டுக்கொண்டிருக்கும். அமைதியாகக்கழியும் ஒவ்வொரு நிமிடமும்போராளிகள் எதிரிமுகாமை பிரச்சினை இல்லாமல் நெருங்கிக்கொண்டிருப்பார்கள் என்பது திண்ணம். எனவே இவர்களின் காதுகள் கூர்மையாக இருந்தது.

அவ்வேளை சந்திரன் உட்பட சில போராளிகள் பக்கற் சோற்றை உடைத்து சமைக்கின்றார்கள். அதனுள் ரின் மீனையும் உடைத்துப்போட்டு கலக்கி சுவையூட்டுகின்றார்கள். வாசனை காற்றில் கலந்து மூக்கில் துளைத்து எச்சிலை ஊறவைத்தது. திடீரென பசி எடுத்த மாதிரி இருந்தது. எழுந்து சமையலறைப்பக்கம் போனான். "என்ன மச்சான் செய்ய வேணும்?" "தேசிக்காய் கொஞ்சம் வெட்டித்தாங்கோ." கிணத்தின் அருகில் நின்ற தேசிமரத்தில் சிலபழங்களை பிடுங்கிக்கசக்கி வெட்டிக்கொடுக்கின்றான். "சமையலுக்கான எனது சிறிய பங்களிப்பு" சிரித்தபடி கூறுகின்றான்.

மதியம் புறப்பட்ட பேரணியானது மாலையானதும் முகாம் முன்காவலரனில் இருந்து ஒரு கி.மீ முன்னால் தன் நகர்வை நிறுத்திக்கொண்டது. நன்றாக இருட்டியவுடன் மீண்டும் அணிகளாகப் பிரிந்து இருபக்கமும் கண்டிவீதிக்கு சமாந்தரமாகச் செல்லத்தொடங்கியது. அதனுள் ஆறு பேர் கொண்ட களமருத்துவ அணியும் நகர்ந்து கொண்டிருக்கின்றது. மூச்சை இழுத்துப்பிடித்த வண்ணம் தங்கள் பாதம் பட்டு இலைகள் சத்தம் எழுப்பாத வண்ணம் மெல்ல, மெல்ல அடிமேல் அடி எடுத்து வைக்கின்றார்கள். இப்பொழுது 500 மீ முன்னால் நிலை எடுத்திருக்கின்றார்கள். முகாமை சுற்றிவர மண்ணணை (பண்ட்) அமைக்கப்பட்டுள்ளது. இந்த பண்டைத்தாண்டினால் உள்ளுக்குள்ள இன்னொரு பண்ட் இருக்கும். அதணையும் தாண்டினால் முட்கம்பிச் சுருள், தடை, முட்கம்பி வேலி என்பன இருக்கும். முன்னரனையும் தாண்டி வழியில் தென்படும் காவலரன்களைத் தகர்த்துத்தான் முகாமை நோக்கிச் செல்ல வேண்டும். ஒவ்வொரு மண் அணையிலும் ஏறும்போது மரணத்தின் உச்சியில் ஏறுவது போல் இருக்கும். ஏனெனில் உள்ளிருக்கும் எதிரிக்கு சாதகமான இலக்காகவே போராளிகள் தென்படுவார்கள். ஆயினும் அத்தடைகள் தாண்டப்பட்டே ஆகவேண்டும். அப்படித்தாண்டும்

போது பலர் இறப்பர், பலர் காயமடைவார்கள், சிலர்தான் முகாமின் மையப்பகுதியை அடைவார்கள். அவர்கள் முகாமினுள் நடத்தும் சண்டையைப்பொறுத்தே முழுத்தளத்தையும் கட்டுப்பாட்டில் கொண்டுவருவதா இல்லை பின் வாங்குவதா என முடிவு எடுக்கப்படும்.

போராளிகளை எதிரிக்குக் காட்டிக் கொடுக்கக்கூடாது என விரும்பியதாலோ என்னவோ இருள் தன்னை நன்றாகவே பலப்படுத்தி உள்ளது. "ஸ்ராட் பயறிங்" ஆரம்பித்துவிட்டது. பின்னால் இருந்து முகாமிற்குள் எறிகணைகளும் அடிக்கப்படுகின்றது. திகைத்த எதிரி தன்னை உசார்படுத்திக்கொண்டான். முகாமினுள் வெளிப்புறம் நோக்கி கனரக இயந்திரத்துப்பாக்கிகளையும், எறிகுண்டு செலுத்திகளையும் பரவலாக இயக்கத் தொடங்கினான். தணல் துண்டங்களினால் வலைப்பின்னல் ஒன்றை ஏற்படுத்தினான்.

செல்மழை வானைப்பிய்த்துக்கொண்டு கொட்டத்தொடங்கியது. டும்..... டும்.... சட..... சட.... படீர்.... படீர்..... போர்ச்சத்தங்கள் செவிப்பறை மென்சவ்வைக் கிழிக்கத் தொடங்கியது. எதிரியினாலும். எம்மவர்களினாலும் ஏவப்பட்ட பரா வெளிச்சம் இரவைப் பகலாக்கியது. அந்த வெளிச்சத்தில் போராளிகள் துப்பாக்கியால் சுட்டவண்ணம் பலமாகக் கத்திக் கொண்டு ஆக்ரோசத்துடன் ஓடியும் பாய்ந்தும் மண் அரணை ஏறிக் கடக்கின்றார்கள். சிலர் குண்டடிபட்டு விழுகின்றார்கள். சிலர் காயங்களையும் பொருட்படுத்தாது உள்ளே பாய்கின்றார்கள். காயம் பட்ட சிலர் தங்கள் காயங்களுக்கு "பீல்ட்கொம்கிறசை" வைத்துக்கட்டி இரத்தப்பெருகை கட்டுப்படுத்திவிட்டு படுத்து கிடந்தபடியே எதிரியின் ரவைகள் புறப்பட்டுவரும் பகுதியை நோக்கி சுட்டவண்ணம் உள்ளார்கள். இன்னும் சிலர் அவன் எல்லைக்குள் ஊர்ந்து முன்னேறுகின்றார்கள். அவர்களில் சிலரின் உயிர் மெல்ல,மெல்ல பிரிந்துபோகின்றது. குருதியில் நனைந்து மண் ஈரலிப்படைகிறது.

சிலர் டோபிடோக்களை எடுத்துக்கொண்டு வேகமாகப்பாய்ந்து சென்று முட்கம்பி வேலியினுள் செருகி இயக்கிவிட்டு பின்னால் வந்து நிலையெடுக்க அது பாரிய சத்தத்துடன் வெடிக்க, முட்கம்பி வேலியையும் சுருள்களையும் காணவில்லை. உடனே அப்பாதையுனூடு போராளிகள் தங்கள் துப்பாக்கிகளை இயக்கிய வண்ணம் மின்னலெனப் பாய்ந்து செல்கின்றார்கள். எதிரி இருக்கலாம் என சந்தேகித்து, உறுதிப்படுத்தும் இடங்கள், காவலரன்கள்

எல்லாவற்றினுள்ளும் கைக்குண்டுகளையும் ரைபிள் கிரனைட்டுகளையும் வீசி சிறு, சிறு எரிமலை வெடிப்புக்களை ஏற்படுத்துகின்றார்கள். எங்கும் கந்தக நொடியும் எரியும் காவலரன்களிலும் புகையும், வலியில் கத்தும் காயமடைந்த போராளிகளினதும் இராணுவத்தினரதும் ஈனக்குரல்களும் எனச்சேர்ந்து இன்னதென விபரிக்க முடியாத அகோரச் சூழலை உருவாக்குகின்றது. எதிரியின் கைமெல்ல ஓயத்தொடங்குகின்றது. நிலமையை உணர்ந்த எதிரி மெல்ல,மெல்ல ஓடத்தொடங்குகின்றான். பின்வாங்கியவன். தனது பிரதான முகாமினுள் இருந்துகொண்டு இப்பிரதேசம் நோக்கி போர்ப்புயலை வேகமாக வீசவைக்கின்றான். எனினும் இப்பிரதேசம் இவர்கள் கட்டுப்பாட்டினுள் மெல்ல, மெல்ல வந்து கொண்டிருக்கின்றது.

இப்பொழுது மருத்துவப்போராளிகள் வேகமாக இயங்கத்தொடங்குகின்றார்கள். காயமடைந்தவர்கள் இருக்கும் இடத்தை தேடித் தேடி ஓடி ஓடி அவசர சிகிச்சைகளைச் செய்கின்றார்கள். எதிரி இவர்கள் கட்டுப்பாட்டில் வந்த இப்பிரதேசத்தினுள் சரமாரியாக எறிகணைகளை வீச, அவை படீர் படீர் என விழுந்து வெடிக்க நிலைமை மோசமடைகின்றது. ஆனால் எதற்கும் கவனம் எடுத்து நிலை எடுக்க முடியாத நிலை, தாமதம் ஒவ்வொரு கணமும் குருதிப்பெருக்கால் போராளிகள் இறந்து கொண்டிருக்கலாம், அதனைத் தடுக்க வேண்டுமாயின் உடனுக்குடன் குருதிப்பெருக்கை நிறுத்த வேண்டும். நோநிவாராணி ஊசி ஏத்த வேண்டும். பிரதான மருத்துவ சிகிச்சையை இலகுபடுத்தக் கூடியவாறு நாளத்தினூடு வென்புளோன் ஏத்த வேண்டும். களமுனையில் இருந்து வேகமாக அப்புறப்படுத்த வேண்டும். போராளிகள் மிக மிக வேகமாகவும் நிதானமாகவும் இயங்கிக்கொண்டு இருக்கின்றார்கள்.

காயமடைந்து. குப்புறக்கிடந்து முனங்கிக்கொண்டிருக்கும் ஒருவனை ஓடிச்சென்று மருத்துவப்போராளி ஜீவானந்தன் புறட்டுகின்றான். வானில் எரியும் பரா வெளிச்சத்தில் முகத்தைப்பார்க்கின்றான், "சிட்டு" வயிற்றில் பாரிய காயம் உடனேயே மேலதிகமாக இன்னுமொரு குருதித்தடுப்பு பஞ்சனையை வைத்துக்கட்டுகின்றான். களமுனையை விட்டு வேகமாக வெளியேற்றி அடுத்தடுத்த மருத்துவத்தளங்களுக்கு சில மணிகளில் கொண்டு செல்லப்படவேண்டும் இல்லாவிட்டால் இவன் வீரச்சாவடைவது நிச்சயம். அவனை உடனடியாக வெளியேற்ற அவன் முனைகின்றான். அப்பொழுது காற்றைகிழித்துவரும் எறிகணை தங்களுக்கு அருகில் விழப்போகின்றது என்பதனை உணர்ந்து, இவன் நிலத்தில் விழுந்து படுக்கவும் இவர்களுக்கு

மிக அருகில் அது விழுந்து வெடிக்கவும் கண நேரத்தில் எல்லாம் நடந்து முடிந்து விடுகின்றது.

அடுத்த கணம் தலை நிமிர்ந்து பார்த்தவனுக்கு என்ன செய்வது என்று தோன்றவில்லை. மருத்துவக்குழுவைச் சேர்ந்த அனைவரும் காயப்பட்டு முனங்கிக் கொண்டு கிடக்கின்றார்கள். இவனுக்கும் வயிற்றில் சிறு காயம் உடனே தனது ஜீன்ஸ் பொக்கட்டில் இருந்த பீல்கொம்பிறசை எடுத்து தனக்கும் கட்டிவிட்டு ஓடி ஓடி மற்றவர்களுக்கு கட்டுகின்றான். ஆட்களைக் கூப்பிட்டு அனைவரையும் விரைவாக வெளியேற்றுகின்றான். ஒவ்வொருவராக அனுப்பி சிட்டுவிடம் வந்து மீண்டும் அவனைப் புரட்டுகின்றான். அதிர்ச்சி இறுதியாக வீழ்ந்த எறிகணையில் மீண்டும் காயமடைந்தவன் சடலமாகக்கிடக்கின்றான். ஆம் ஈழவிடுதலைக்காக உறுமிய புலியொன்று தன் பேச்சடங்கியது. பாடிய குயிலொன்று தன் மூச்சடங்கியது.

இதேவேளை ஏனைய போராளிகள் எதிரியின் ஆயுதங்களைச் சேகரிப்பதிலும் அவன் பாசறைகளைத் தீயிடுவதிலும் ஈடுபட்டுக்கொண்டிருக்கின்றார்கள். கண்டி வீதியின் ஒரு பகுதி கட்டுப்பாட்டினுள் வந்து விட்டது. ஆனால் இன்னும் அவனது பிரதான முகாம் பிடிபடவில்லை. அங்கு சண்டை நடந்துகொண்டிருக்கின்றது. இன்னும் 30-40 நிமிடங்களினுள் பிடித்துவிட வேண்டும். இல்லையேல் கள நிலமை எதிரிக்கு சாதகமாக மாறிவிடும்.

இத்தாக்குதல் இடையில் துண்டறுந்து நடைபெறுவதால் தன்னை அவன் மீழ ஒழுங்கமைத்து முன்னாலும், பின்னாலும் பலத்தைக்கூட்டி இவர்களை இடுக்கிப் பிடியொன்றினுள் மாட்ட முனைவான். ஆனால் அவன் அவ்வாறு செய்ய அவகாசம் கொடுக்காமல் தளபதிகள் சண்டையை வேகப்படுத்தினார்கள். துர் அதிஸ்டம் எதிர்பார்த்தது நடக்கவில்லை. ஒரு வழியாக பிரதான முகாமினுள் நுளைய பாதை எடுத்த போராளிகள் அதனூடாக வேகமாக ஓடிச்செல்கின்றார்கள் ஆனால் அப்பகுதியை நோக்கி எதிரிகள் பெரும் எடுப்பில் தாக்குதல் கொடுத்தான். விளைவு முன்னால் ஓடிச் சென்ற போராளிகள் அனைவரும் குண்டடிபட்டு விழுகின்றனர். அவர்களுக்கு ஆதரவாகச் சென்ற போராளிகளும் காயமடைந்துவீரமரணம் அடைகின்றார்கள்.

திட்டமிட்டபடி ஏனைய முகாம்களும், காவலரன்களும்

பிடிபட்டுவிட்டன. கனரக ஆயுதங்களும் வாகனங்களும் கைப்பற்றப்பட்டது. எனினும் பிரதான முகாம் பிடிபடதாது தோல்வியே. ஆனால் அதற்காக கவலைப்பட நேரமில்லை. மோட்டார் பிரிவுகளுக்கு அறிவித்தல் கொடுக்க அவர்கள் 120.மி.மீ எறிகனைகளை தொடராக பிரதான முகாமினுள் ஏவிவிடுகின்றனர்.

எதிரி தான் மீண்டும் தாக்கப்படுவதாக எண்ணி தனது தற்காப்பு தாக்குதலை தீவிரப்படுத்தினான். அவன் முன்னேறிவராமல் இருப்பதற்காக இத்திசை திருப்பு நடவடிக்கையை மேற்கொண்டனர். ஏனைய இடங்களில் பரவலாக கிடந்த காயமடைந்த போராளிகளையும் வித்துடல்களையும் அப்புறப்படுத்த அணிகள் விடப்படுகின்றன. சிறு காய மடைந்த போராளிகள் வலியைப் பொருட்படுத்தாது நடந்து வந்தார்கள்.ஏனைய போராளிகள் மருத்துவப்போராளிகளுக்கு தமது பங்களிப்பை நல்கினர்.

வீதிக்கு மேற்குபக்கமாக காயமடைந்து கிடந்த போராளிகளை முதலில் தூக்கி வந்து கிழக்குப்பக்கமாக கிடத்தினார்கள். பின்னர் எல்லோரையும் அப்புறப்படுத்தினர்.

இப்பொழுது பின்வாங்கி வரும் போராளிகளை நோக்கி வானில் இருந்து MI 24 உலங்கு வானூர்தி தாக்குதலை நடத்தத் தொடங்கிவிட்டது. அதற்கு ஏற்ப நிலை எடுத்தவர்கள் வேகமாக பின்வாங்குகின்றார்கள்.

நேரம் இரவு 8.30. மாலை உணவை முடித்துவிட்டு எல்லோரும் மெல்லிய குரலில் கதைத்த வண்ணம் இருக்கின்றார்கள். அவ்விடத்தில் இருந்து சற்று எட்டத்தில் காவல் கடமையில் சில போராளிகள் ஈடுபட்டவண்ணம் உள்ளனர். இவர்கள் உரையாடிக் கொண்டிருந்தாலும் செவிகளை கூர்மையாகவே வைத்திருக்கின்றார்கள். அப்பொழுது ஒரு போராளி மெல்ல வந்து இவர்களிடம் கூறினான். “அண்ண! அங்கால இருக்கிற பத்தைக்குள்ள சத்தம் ஒன்று கேட்டது. நான் கிட்டப்போக, சேஞ்லிவர் தட்டும் சத்தம் கேட்டது.” உடனேயே எல்லோரும் உசார் ஆனார்கள்.

எல்லோரும் ஏற்கனவே ரவையேற்றித்தயாராக வைக்கப்பட்டிருந்த ரைபிள்களை எடுத்துக்கொண்டு மெல்ல மெல்ல நடக்கத்தொடங்கினார்கள். இந்த நிலை மிகவும் சங்கடம் தரக்கூடிய ஒன்றாக இருந்தது. ஏனெனில்

துர்ரதிஸ்ட்டவசமாக எதிரியின் ரெக்கிக்காரங்கள் வந்து நின்று, இவர்களின் நடமாட்டங்களை அவதானித்து, உரிய இடத்திற்கு அறிவித்து இருப்பார்களானால்! நினைக்கவே நெஞ்சில் உதறல் எடுத்தது. இன்னொரு கொக்குத்தொடுவாயை தமிழீழம் சந்திக்க வேண்டிவரும். எம்மவரின் துரோகத்தால் இல்லை எதிரியின் திறமையால். அதற்கு அனுமதிக்கமுடியாது.

எதிரி முகாமைச் சுற்றி இப்பொழுது போராளிகள் நிலை எடுத்திருப்பார்கள் சண்டை ஆரம்பிக்கும் வரை கடக்கும் ஒவ்வொருகணமும் கவனமாக கழிக்கவேண்டிய நிலை. ஒரு கணத்தில் ஏற்படும் தவறே பலநூறு போராளிகளை பலி எடுப்பதுடன் சண்டையின் போக்கையே திசை திருப்பி விடலாம்.

ஆதலால் இவர்கள் முன் வீட்டில் முகாமிலிருந்த போராளிகளுக்கும் விடயத்தை அறிவித்தார்கள். பின் ஒவ்வொரு பற்றையாக அலசத்தொடங்கினார்கள். இவர்கள் வெளிக்கிட வேண்டிய நேரம் நெருங்கிக்கொண்டிருந்தது. அந்தநேரம் பார்த்து கிணற்றடியில் வாளிதட்டப்படும் சத்தம் கேட்டது. தொடர்ந்து அங்கிருந்து யாரோ ஓடும் சத்தம் கேட்டது. உடனேயே இவனுக்கு அருகில் நின்ற போராளி துப்பாக்கியை சுடுவதற்கு ஆயத்தமாக தோளிற்கு உயர்த்தி விட்டான். இந்த நேரத்தில் அனாவசியமாக தீர்க்கப்படும் ஒவ்வொரு வேட்டும் பெரும் குழப்பத்தை ஏற்படுத்திவிடும். உடனே இவன் கையால் தடுத்து சுடவேண்டாம் எனச் சைகையால் கூறினான். பின்னர் இருவரும் கிணற்றடியை நோக்கி மெல்ல நகர்ந்தார்கள். சிறிது நேரம் நின்று காதுகளை கூர்மையாக்கி காற்றுக்கு மரங்கள் அசையும் ஓசையில் இருந்து, சகசலதையும் அவதானித்தார்கள். செவிப்புலன் ஒன்றே இப்பொழுது இவர்களுக்கு கைகொடுக்கக் கூடியது. ஏனெனில் சில யார் தூரத்திற்கு அப்பால் கண்களை நம்ப முடியாது.. அது ஏமாற்றியும் விடலாம், எனவே இவர்கள் காதுகளின் உச்ச பயனைப்பெற முயற்சித்துக்கொண்டிருக்கின்றார்கள். அவ்வேளையில் மீண்டும் சருகுகள் சரசரக்கும் சத்தம் கேட்டது. இப்பொழுது சத்தம் இவர்களை நோக்கி வந்துகொண்டிருந்தது. இருவருமே துப்பாக்கியை தயார் நிலையில் பிடித்தவண்ணம் சேஞ்லிவரை ஒட்டோவுக்கு கொண்டுவந்தார்கள். தங்களின் இதயத்துடிப்பு வீதம் அதிகரிப்பதை தாங்களே உணர்ந்தார்கள். சரசரக்கும் சத்தம் கேட்டதே தவிர உருவங்கள் ஒன்றும் தென்படவில்லை. இருவரும் மூச்சைப்பிடித்தபடி நின்றார்கள். இப்பொழுது சிறிய உருவம் ஒன்று அசைவதும் அந்த இருளிலும் பத்து யார் தொலைவில்

தெரிகிறது. உன்னிப்பாக கவனித்துக்கொண்டிருந்தவர்கள் அவர்களுக்கு அருகில் வந்தவுடன் பெருமூச்சொன்றை விட்டபடி ஒருவரை ஒருவர் பார்த்து மென்மையாகச்சிரிக்கின்றார்கள். ஒரு நாய் இவர்களை நன்றாக ஏமாற்றிவிட்டது. இருவரும் எதுவும் கதைக்காமல் வீதியில் வந்து நின்றார்கள். கிளியறிங் செய்யப்போனவர்கள். ஒவ்வொரு இடங்களிலும் போராளிகளை நிறுத்திவிட்டு வந்தார்கள். எவ்விதத்திலும் ஒன்றையும் காணவில்லை. ஆனால் சுமார் 100 யார் தூரத்தில் நாய் ஒன்று குரைப்பது கேட்டது.

இவர்களால் இப்பொழுது எதுவும் மேலதிகமாக செய்ய முடியாது. நேரம் 10.00 மணியாகிவிட்டது. இன்னும் அரை மணித்தியாலத்தில் சண்டை ஆரம்பித்துவிடும். அப்பொழுது எதிரி முகாமில் இருந்து ஆட்லறி எறிகணைகளை ஏவத்தொடங்குவான். இவர்களுக்கு குளப்பம் ஏற்பட்டுவிட்டது. "சில வேளை...... சீ... அப்படியிருக்காது, அவன் அலேட் ஆகியிருந்தால் இப்பபெரியகளோபரம் ஆரம்பிச்சிருக்கும்" என இவன் தன்னுள் எண்ணியிருக்கின்றான். அப்பொழுது ஒருவன் கூறினான். எங்களுக்கு அதிஸ்டம் இருக்கு மச்சான் ஆட்லறிகளை உள்ளுக்குள்ள வைச்சுத்தான் இருக்கிறான். முதன் முறை போகேக்க மூன்று ஆடலறியையும் அழிச்சுப்போட்டு ஓடிட்டான். இரண்டாம் முறை போகேக்க ஒன்றும் இல்லை. ஆனால் இந்தமுறை அம்பிடும். நல்ல வேட்டை தான்! இதனைக்கேட்க இவனுக்கும் மகிழ்ச்சியாக இருந்தது.

நேரம் 10.15. எல்லோரும் அந்த இடத்தை மீண்டும் ஒரு முறை கிளியர் பண்ணிப்போட்டு ஆயத்தமானார்க்ள். பெண் போராளிகளும் இவர்களுடன் வந்து இணைந்துகொண்டார்கள். எல்லோரையும் ஒரு முறை எண்ணிப்பொறுப்பாளர் சரிபார்த்துக்கொள்கின்றார். எவனாவது எங்கேயும் நித்திரையாய்க் கிடப்பாங்கள்! எங்கடையள் அவன்ர முட்கம்பி ரோளுக்குள்ளேயும் நித்திரை கொள்ளுகிறதுகள். ஒருவன் மெல்ல முணுமுணுப்பது கேட்கிறது. மீண்டும் ஒருமுறை ஆட்கள் எல்லோரையும் உறுதிப்படுத்திவிட்டு எல்லாப்பொருட்களையும் தூக்கிக்கொண்டு வாகனங்களுக்கு அருகில் போகின்றார்கள். அங்கு இரண்டு றக்ரரும் ஒரு ஜீப்பும் நிற்கின்றன.

நேரம் 10.30. டும்.... டும்... டுமில்.... டுமில்... சட... சட.... சண்டை ஆரம்பித்து விட்டது. அனைவரும் பரபரப்பானார்கள். ஜீப்மட்டுந்தான் செலப்ஸ்ராட், வாகனம், றக்ரர் இரண்டும் தள்ளித்தான் ஸ்ராட் பண்ணவேண்டும். எல்லோருமாகச்

சேர்ந்து ஒரு றக்கரை தள்ளி ஸ்ராட் வரச் செய்தார்கள். உடனே அந்த றக்ரர் பெட்டியைக்கொண்டு மற்றையதின் பெட்டியை இடித்துத்தள்ளி ஸ்ராட் வரச்செய்தார்கள். உடனே எல்லோரும் இரண்டு றக்ரரிலும் பாய்ந்து ஏறினார்கள். ரைபிள் எல்லாம் சேம்பரில இருக்குதா? பொறுப்பாளரின் குரல் எச்சரித்தது. முன்னால் ஜீப் சீறிப்பாய்ந்தது. அதனைத்தொடர்ந்து முதலாவது றக்ரர் வேகமெடுக்கிறது. கறபுற கறபுற எனும் றக்ரரின் ஓசையே உற்சாகமூட்டுவதாக இருக்கின்றது. மற்ற றக்ரரும் புறப்பட்டது. அதில் இவன் ஏறிக்கொண்டான். "என்னடா கஸ்டகாலம்! லைற் இல்லை முன்னால் றைக்ரருக்கு பக்கத்தில் இருந்தவன் ரோச் அடிக்க ஒரு 100 மீற்றர் தூரம் போயிருக்கும்

வாகனம் வீதியில் இருந்து விலகி ஒரு வீட்டுவாசலில் போய் நிற்கிறது. சமர் நடக்கும் இடத்தில் இருந்து 300 மீற்றர் தூரத்தில் இவ்வீடு இருக்கிறது. உடனடியாக எல்லோரும் இறங்கி அவ்வீட்டினுள் செல்கின்றார்கள். அதனுள் இருந்த பொருட்களை எல்லாம் எடுத்து ஒரு அறையினுள் போடுகின்றார்கள். விறாந்தை மற்றும் அறைகளை துப்பரவு செய்கின்றார்கள். படீர்...... படீர்........ என விழுந்து வெடிக்கும் எறிகணைக்கிளறல்கள் வீட்டுச்சுவர்களில் சடார், சடார் என மோதுகின்றன. சர்.... சர் என துப்பாக்கிச்சத்தங்கள் இடைவெளியில்லாமல் ரவைகளை உமிழ்கின்றன. எவ்வித பாதுகாப்பு ஏற்பாடுகளும் இல்லாத நிலையில் நாற்பது பேர்கொண்ட இம்மருத்துவக்குழு காணப்படுகின்றது. ஒரு எறிகணை விழுந்தால் போதும் இவர்களின் நிலை கவலைக்கிடமாகப் போய்விடும். போர்க்களத்தில், அதன் வேகத்தில் இது போன்றவை கவனத்தில் எடுக்கப்படுவது அரிதானதுதான்.

தேவைகள் வேகங்களையும் தீர்மானிக்கும்போலும், எல்லோரும் மிக மிக வேகமாக பம்பரமாக சுழன்று கொண்டிருக்கின்றார்கள். வேலி ஒன்று வெட்டப்பட்டு காயப்பட்டவர்களை ஏற்றிவரும் வாகனங்கள் இலகுவாக உள்நுளைந்து வெளியேறப்பாதையொன்று உருவாக்கப்பட்டது. அருகில் இருந்த மாட்டுக்கொட்டில் ஒன்று துப்பரவு செய்யப்பட்டது. வீட்டினுள் தூசு மண்டிக்கிடந்தது. அங்கு காணப்பட்ட முறிந்த துடைப்பம் ஒன்று எடுத்து துப்பரவு செய்யப்பட்டது. வெளியில் வேலை செய்வதற்கு, எதிரியும் எம்மவர்களும் ஏவிய பரா வெளிச்சங்கள் கைகொடுத்துக்கொண்டிருக்கின்றது. ஆனால் வீட்டினுள் ரோச் வெளிச்சத்திலேயே வேலைகள் நடைபெற்றுக்கொண்டு இருக்கின்றது. திடீரென ரோச் அடிக்காதீர்கள்! பயிற்றர் காறன் வந்திட்டான்" எனப்பலகுரல்கள் ஒன்றாகக்கேட்டன. பாடசாலையில் எல்லா மாணவர்களும்

தளபாடங்களை ஒன்றாக இழுத்து நகர்த்தும் போது கேட்பது போன்று கராங். புராங், எனும் சத்தத்துடன் MI 24 உலங்குவானூர்தி தொடராக ஏவும் ரொக்கற் மோட்டர்கள் விழுந்து வெடித்து போர்ச்சூழலிற்கு விகாரத்தைக் கொடுக்கின்றன.

ஆனால் ரோச் அடிக்காமல் இவர்களால் வேலை செய்வது கடினமாக இருந்தது. அதனால் ரோச் முனையை கையால் பொத்திப்பிடித்தவண்ணம் விரல் இடுக்குகளினூடு வெளிவிடப்படும் சிறு வெளிச்சங்களினூடாக பணிகளைச் செய்யவேண்டியுள்ளது. திட்டப்படி இவர்கள் இங்கு தரிப்பதற்கு இல்லை. பாதை உடைபட்டு மெயின் பிடிபட்டவுடன்A9 வீதியைக் குறுகறுத்து மறுப்பக்கம் செல்லவேண்டும். எனினும் காயங்கள் இங்கு வரத்தொடங்கினால் சிகிச்சை செய்யவேண்டி இருக்கும். எதற்கும் தயாராக இவர்கள் தங்களை ஆயத்தப்படுத்தினார்கள்.

நேரம் 11.30 ஆகிவிட்டது. மருந்துகளை பிரித்து தேவைக்கு ஏற்ப அடுக்கினார்கள். பின்னர் கூட்டமாக இல்லாமல் தள்ளித்தள்ளி நிலை எடுத்தார்கள். ஒரு சில எறிகணைகளால் பாரிய இழப்புகள் ஏற்படக்கூடாது என்பதற்காகத்தான். எதிர்பார்த்தபடி முகாம் இவர்களின் பூரணகட்டுப்பாட்டினுள் வரவில்லை என்பதை சூழ்நிலை விளக்கியது.

எனவே இவர்களின் திட்டம் திடீரென மாற்றப்பட வேண்டியதாகியது. இவர்கள் வந்த வழியே காயக்காரரை அனுப்பவேண்டும். எவ்வளவு காயம் வந்தாலும் இவர்களிடம் இருப்பதோ இரண்டு ரக்ரரும் ஒரு ஜீப்பும்தான் போர்க் களங்களில் இவ்வாறான எதிர்பார

நெருக்கடிகளுக்கு முகம் கொடுக்க வேண்டியது தவிர்க்கமுடியாதவை. பொதுவாக களங்களின் சாதக, பாதக காரணிகள் எங்களின் எதிரியின் பலம், பலவீனங்கள் என்பவை ஆராயப்பட்டிருக்கும். அதற்கு ஏற்பவே திட்டங்கள் தீட்டப்பட்டு இருக்கும். ஆனால் நடைமுறையில் எதிர் பார்க்காத சாதக பாதக காரணிகளைச் சந்திக்கவேண்டிவரும். அதனை உரிய முறையில் இனம் கண்டு முடிவு எடுத்து செயற்படுத்துவதிலேயே பொறுப்பாளர்களினது ஆளுமை தங்கியிருக்கிறது.

காயங்கள் வந்தால் ஏற்றக்கூடிய மாதிரியும் அதேவேளை சமர்

இவர்களுக்கு சாதகமாக அமைந்தால் உடன் புறப்பட்டு மறுபக்கம் செல்லவும் தயார் நிலையில் இருந்தார்கள். பொறுப்பாளர்களின் இரைந்துகொண்டிருக்கும் வோக்கிக்கு அருகில் இவன் அடிக்கடி சென்று கள நிலவரத்தை அனுமானிக்க முயற்சிக்கின்றான். பெரும்பாலும் வந்தவழியேதான் பின்வாங்கவேண்டும், திட்டம் தலைகீழாக மாறிக்கொண்டிருக்கின்றது. உண்மையில் இது மிக, மிக ஆபத்தான வேலை, பகைவர்களின் கொலைவலயத்தினுள் நிற்கின்றார்கள், விடிவதற்குள் அவனது குகை வாசலைத்தாண்ட வேண்டும். இரண்டு நாள் நகர்ந்து வந்ததை சில மணித்தியாலங்களில் செய்ய வேண்டும்.

நேரம் 12.45 ஜீப் வேகமாக இரைந்து வருவது கேட்கிறது, காயம் வருகிறது! ஒருவன் கத்த எல்லோரும் தயார் ஆனார்கள். சுமார் ஏழு காயக்காரர்களைக்கொண்டு வந்து இறக்கினார்கள். எல்லோரும் தங்களுக்குரிய பணிகளைச் செய்யத்தொடங்கினார்கள். சிறிய காயக்காரரை மாட்டுக் கொட்டிலினுள் அனுப்பிவிட்டு அவசரசிகிச்சைக்கு உரியவர்களை மட்டும் கவனிக்கத்தொடங்கினார்கள்.

ரோச் வெளிச்சம்மட்டும் உள்ளது, அதனையும் முழுமையாக அடிக்கமுடியாது. பெரிய காயங்களின் இரத்தப்பெருக்கு நிறுத்தப்பட்டு வென்புளோன் போடப்பட்டு அதனூடு திரவ ஊடகங்களும் நோறிவாரணியும் ஏற்றப்பட்டு தனித்தனியே பரவலாக கிடத்தப்பட்டார்கள்.

"அண்ண ஒரு காயம் சீரியஸ், கால் முறிஞ்சு போட்டுது அம்புயூற்ரேசன் செய்தால் நல்லது. ஆனால் இன்ஸ்சுருமென்ஸ் இல்லை" வான்மதி இவனிடம் கூறுகின்றாள்.

உடனே அவ்விடம் நோக்கி விரைந்தார்கள், அப்பெண்போராளியின் வலக்கால் முழங்காலிற்கு கீழாக சிதைந்து தொங்கிய வண்ணம் உள்ளது. காலில் எறிகணைச் சிதறல்கள் சூட்டுடன் பட்டிருக்கவேண்டும். இரத்தப்பெருக்கு பெரிதாக இல்லை பெரிய குருதிக்கலங்களும் சேர்ந்து கருகி இருக்கவேண்டும், ஆனால் அவளின் நிலமை கவலைக்கிடமாக இருந்தது.

எப்படியோ இரத்தம் வெளியேறிவிட்டது. பலமான முறிவுக்குரிய வலி, ஆள் அதிர்ச்சிக்குப் போய்விட்டாள். நாடித்துப்பு வீதம் அதிகமாகவும் துடிக்கும் தன்மை பலவீனமாக உள்ளது. சுவாசம் ஆழமற்றதாகவும்

விரைவாகவும் நடைபெறுகின்றது. குருதி வெளியேற வேறு காயமும் இருக்கவேண்டும். உடல் ஆடைகளைக் களைந்து பார்க்கின்றார்கள். முதுகுப்புறம் ஊடுருவல் காயம் உள்ளது. குருதிப் பெருக்கு ஏற்பட்டிருக்குது எப்படியும் காப்பாற்ற வேண்டும். உடனே திரவ ஊடகத்தை நாளத்தினூடு ஏற்றச்சொல்லிவிட்டு இவர்கள் இருவரும் காலை வெட்டி அகற்றும் முயற்சியில் இறங்கினார்கள்.

இவன் தன்னுடன் கொண்டு சென்றிந்த உபகரணங்கள் உதவுவதையிட்டு மகிழ்ச்சி அடைந்தான். மயக்க மருந்து கொடுக்க முடியாது.



அதனைத் தாங்கக்கூடிய நிலையில் நோயாளி இல்லை. சில வேளை ஆள் முடியலாம். எனவே நோநிவாரணி மட்டும் கொடுத்துவிட்டு செயலில் இறங்க வேண்டியது தான். கையுறைகள் எதுவும் போடாமல் சத்திர சிகிச்சைக்குரிய பிளேட்டிற்கு கைபிடியும் போடாமல் வான்மதி சிதைந்த தசைகளை மழ மழ என வெட்டினாள். இவன் என்பு வெட்டும் கம்பிகொண்டு கால் என்புகளை சர சர என மரம் அறுப்பது போல் அரிந்தான். நரம்புகள் வெட்டப்படும் போது நோயாளி முனங்கினான். அந்த நேரம் பார்த்து எறிகணை ஒன்று இவர்களிற்கு மிக அருகில் விழுந்து வெடித்தது. சிதறல்கள் வந்து விழுவதும் கேட்டது.

"உடனேயே காயக்காறரை வெளியேற்ற வேண்டும். இந்த இடம் பாதுகாப்பானது இல்லை. எல்லோரும் விக்ரோ பண்ணுங்கோ, பொறுப்பாளரின் குரல் இனிமையற்றதாக ஒலிக்கின்றது. எறிகணை அதிர்வினால் வீடுமுழுவதும் தூசு புகைமண்டலமாக காட்சி அளிக்கின்றது. இந்நிலையில் நோயாளியை அனுப்பினால் அரை மணித்தியாலம் கூட உயிருடன் இருக்கமுடியாது. குருதியை எவ்வளவு விரைவாக ஏற்றமுடியமோ அவ்வளவு விரைவாக ஏற்ற வேண்டும் கெதியா பிளட் ஏற்றுவதற்கு ஒழுங்கு செய்யுங்கோ இவன் ஒரு போராளிக்கு கட்டளையைப் பிறப்பித்துவிட்டு குருதியமுக்கத்தை அளக்கின்றான். 80/50 ஆபத்தான நிலை. வெளியில் நிலமை வேறு எல்லாப்பொருட்களும் றக்ரரில் ஏற்றப்பட்டு கொண்டிருக்கின்றது. பொறுப்பாளர் வேகப்படுத்துகின்றார். இவர்களுக்கு தர்மசங்கடமான நிலை, ஆனால் எதுவும் செய்ய முடியாது. இக் காயத்துடன் போராடிக்கொண்டிருக்கும் போது வேறு காயக்காரர்கள் குவியத் தொடங்குகின்றார்கள். உடனேயே மனோச் சிலரை பின்னுக்கு சற்றுத்தள்ளி இன்னொரு இடத்தை ஒழுங்கு படுத்தச் சொல்லுகின்றார்.

"டொக்ரர் நீங்களும் வெளிக்கிடுங்கோ!" மனோச் இவனிடம் கூறுகின்றார். இப்படியான நேரங்களில் பொறுப்பாளர்களின் இராணுவ மூளை இலாபநட்டக்கணக்குப்பார்க்கும். ஏனெனில் ஒரு போராளியைக் காப்பாற்ற தாமதித்து பலரை காயப்படுத்துவதோ அன்றிச் சாகவோ அனுமதிக்கமாட்டார்கள். ஆனால் மருத்துவப்போராளியின் மனோநிலையே வேறு தன்னால் காப்பாற்றப்படும் ஒவ்வொரு போராளியையும் நினைத்து மனத்திருப்தி அடைவான். ஆதலால் இவ்வாறான நேரங்களில் இவர்களின் முடிவு மாறியே இருக்கும்.

இவர்கள் உடனே சொல்கின்றார்கள் பிளட் ஏற்றிப்போட்டுத்தான் வருவம். "சரி சரி வேகப்படுத்துங்கோ மற்றவர்களை அனுப்பிக்கொண்டிருக்கின்றேன்."

இவர்களுக்கு அனுமதி கிடைக்கின்றது. இவன் குருதிப்பரிசோதனைக்கு ஆயத்தம் செய்யப்பட்டிருந்த அறையினுள் செல்கின்றான். இவர்களின் கஸ்ரகாலம் சென்றிபியூச் பூட்டுவதற்கு ஏதுவாக மேசைகள் எதுவும் இருக்கவில்லை. சுற்றும் முற்றும் பார்க்கின்றான். சுவரில் சிமேந்துகளால் கட்டப்பட்ட தட்டுக்களை உடைய சிறு அலுமாரி ஒன்று உள்ளது. அதன் ஒரு தட்டில் இவன் சென்றிப்பூச்சை பொருத்தி அமர்த்திப் பிடிக்கின்றான். இன்னொருவன் அதனைக்கையால் சுற்றுகின்றான்.

காயமடைந்தவனில் எடுக்கப்பட்ட சிறிதளவு குருதிக் கலங்கள் வேறாகவும் சிரம் வேறாகவும் பிரிக்கப்படுகின்றது. இவ்வளவு நேரமும் செய்த வேலைகளில் இதுவே கடினமானதாக இருக்கின்றது. குருதி வங்கிகளில் என்றால் இது மிக இலகுவான ஒரு விடயம். மின்சாரத்தில் இயங்கும் சென்ரிபியூசர்கள்முன் பட்டின்களைத் தட்டினால் போதும்.

பிரித்தெடுக்கப்பட்ட சிரத்துடன், ஐஸ்பெட்டியில் பாதுகாப்பாக பைகளில் கொண்டுவரப்பட்டிருந்த குருதியில் இரு துளி எடுத்து கலக்கப்பட்டு மீண்டும் சென்றிபியூச்சில் வைத்து சுற்றப்படுகின்றது. பின் அது நுணுக்குக்காட்டியின் கீழ் வைத்துப்பார்க்கப்படுகின்றது. இதனை வசதியாக செய்வதற்கு மேசையோ மின்சார வசதியோ இல்லை. அதற்குப் பதிலாக ஒருவன் முழங்காலை உயர்த்திப்பிடிக்க அதில் நுணுக்குக்காட்டியை வைத்துப்பிடிக்க இன்னொருவன் ரோச் வெளிச்சத்தை கீழாக அடிக்க இவன் மேலால் பார்க்கின்றான். அடச்சனியன் குருதி கொட்டிவிட்டது. சரி இன்னொன்றை எடு செய்து பார்ப்பம்.

ஆனால் அதற்குள் பொறுப்பாளர் அவசரப்படுத்தினார். இவர்கள் எதுவும் கதைக்காமல் அடுத்த குருதியை எடுத்து மீண்டும் பரிசோதிக்கின்றார்கள். அது பொருந்தி வந்ததும் உடனேயே அதை உரிய போராளிக்கு ஏற்றினார்கள். ஒரு கையில் இரத்தம் ஏற்றப்பட்டுக் கொண்டிருக்கின்றது. மற்றைய கையில் உயிர்காப்பு மருந்தும் நுண்ணுயிர் கொல்லி மருந்துகளும் ஏற்றிவிட்டால் சற்றுப் பிந்தி போனாலும் பரவாயில்லை. என நினைத்தவன் மேற்படி மருந்துகளை இன்னொரு போராளியுடன் சேர்ந்து டிஸ்சில் வோட்டர் விட்டுக் கரைத்து ஸ்ரிஞ்சில் எடுக்கின்றாள். அப்போது வந்த இரண்டு போராளிகள் மேற்படி காயக்காரப் பிள்ளையை அவதானமாக தூக்கி சென்று ஆயத்தமாக இருக்கும் றக்ரரில் ஏற்றினார்கள். இனியும் தாமதித்து றக்ரரில் ஏற்றியிருக்கும் இருபது காயக்காரர்களையும் பலிகொடுக்க ஏலாதாம். அவர்கள் கூறுவது காதில் கேட்கின்றது. இவர்கள் அப்போராளியை ஏற்றவும், றக்ரர் சீறிப்புறப்படவும் இவன் ஸ்ரிஞ்சில் எடுத்த மருந்துகளை வைத்துக்கொண்டு திகைத்து நிற்கவும் சரியாக இருந்தது. இம்மருந்து ஏற்றப்பட்டால் நின்மதியாக இருந்திருக்கும்.

நிலமையை கணத்தில் விளங்கிய வாண்மதி இவன் கையில் இருந்த ஸ்ரிஞ்சையும் மிகுதி மருந்துகளையும் பறித்து எடுத்தவள் வேகமெடுக்கும் றக்ரரைக் கலைத்து ஓடிப் பிடித்து தாவி ஏறுகின்றாள். றக்ரர்

ஓடிக்கொண்டிருக்கிறது. இருபக்கமும் எறிகணைகள் அகோரமாக விழுந்து வெடித்துக்கொண்டிக்கின்றது. பராலைற் வெளிச்சத்தில் அம்மருந்துகளை நிதானமாகவும் வேகமாகவும் ஏற்றியவள். மீண்டும் றக்ரரில் இருந்து குதித்து இவர்களை நோக்கி வருகின்றாள். அவளின் வேகமான செயற்பாடு இராணுவ மருத்துவர்களுக்கு உதாரணமாக அமைகின்றது.

"ஆளின் நிலமை மோசமாகத்தான் இருக்கு. கடைசியாக எவ்வளவு செய்ய வேண்டுமோ அவ்வளவும் செய்திருக்கு, இனி..... கூறியவன் முடிக்காமல் மீதம் இருக்கும் காயக்காரர்களைக் கவனிக்கப் போகின்றான்.

ஏனைய காயக்காரர்களையும் மற்றய றக்ரரிலும் ஜீப்பிலும் ஏற்றி அனுப்புகின்றார்கள். இறுதியாக சில காயக்காரர்களையும் ஏற்றிக்கொண்டு இவனும் அவ் றக்ரரில் தொற்றிக் கொள்கின்றான். வேகமாக பின்வாங்குகின்றார்கள். இவர்களை ரவைகளும் எறிகணைகளும் கலைத்துக்கொண்டு வருகின்றனவா? அல்லது திட்டத்தை கைவிட்டு ஓடுபவர்களைப் பார்த்து எள்ளிநகையாடுகின்றனவா? விளங்கிக் கொள்வதில் சிரமப்படுகின்றான்.

மருதோடைச் சந்திவரை சுமார் 1 கி.மீ பின் வாங்கினார்கள். அங்குள்ள வீடு ஒன்றில் அவருடன் முன்னர் வந்த குழுவினர் சிகிச்சை அளிக்கக்கூடிய ஒழுங்குகளைச் செய்திருந்தனர். ஏறக்குறைய ஐம்பது போராளிகள் வரை வீட்டிலுள்ளும் முற்றத்திலும் கிடத்தப்பட்டுள்ளனர். சிலருக்கு இரத்தம் கொப்பளித்துக் கொண்டு ஓடுகின்றது. இவர்களின் மருத்துவப்பலம் மூன்றாகப்பிரிந்து இருந்தது. பொறுப்பாளருடன் முதலில் இவர்கள் நின்ற இடத்தில் ஒரு குழுவும், இடையில் நகர்த்துவதற்காக ஒரு குழுவும் இப்போது இவர்கள் நிற்கும் இடத்தில் ஒரு குழுவும் என, ரோச் வெளிச்சத்தில் ஓடும் இரத்தப்பெருக்குகளை முதலில் நிறுத்துகின்றார்கள். எறிகணை மழை அப்பிரதேசம் எங்கும் வஞ்சகமின்றி பொழிந்து கொண்டிருக்கின்றது. அவை வெடிக்கும் சத்தமும் இவர்கள் ஓடித்திரிவதனால் ஏற்படும் சத்தமும் தங்களிடையே போட்டி போடுவதுபோல் இருக்கின்றது. இவர்களின் பரிதாப நிலையைப்பார்த்து கனரக இயந்திரத்துப்பாக்கிகள் எக்காளச் சிரிப்பூட்டிக்கொண்டிருக்கின்றன.

இவர்கள் கொண்டுவந்த பொருட்களை இறக்கி ஒழுங்குபடுத்தி சற்று நிதானமாக சிகிச்சையை ஆரம்பிக்கின்றார்கள். அப்பொழுது கிரிச் என பிறேக் அடித்து நிற்கிறது ஜீப் அதிலிருந்து சில காயங்களுடன் இறங்கிய மனோச் சொல்கிறார். டாக்டர் உங்களோட கொஞ்சப்பேரைக் கூட்டிக்கொண்டு உடனே பின்னால போங்கோ! இவன் அதிர்ச்சியுடன் நிமிர்ந்து பார்க்கின்றான். பல போராளிகள் காயத்தினால் துடித்துக்கொண்டிருக்கின்றார்கள். இந்நிலையில் அவர்களை விட்டுவிட்டோ அல்லது மீண்டு வாகனத்தில் ஏற்றிக்கொண்டு செல்வதைக் கனவிலும் நினைக்க முடியாது. குறைந்தது. நோநிவாரணி கூடக்கொடுக்கப்படவில்லை. டொக்டர் யோசிக்க நேரமில்லை பிளட் பாங் செற்றப்பையும் உங்களுடன் கொண்டு போங்கோ. போய் நொச்சிக்குளம்பள்ளிக்கூடத்தில் ஒழுங்கு படுத்துங்கோ, நாங்கள் பின்னால வாறம் தொடர்போட போங்கோ கட்டளைகள் வேகமாகப் பிறப்பிக்கப்படுகின்றது.

ஒன்றும் செய்யமுடியாத நிலை எல்லோரும் ஓடி ஓடி மீண்டும் காயக்காரரையும் பொருட்களையும் றக்ர்ர்களில் ஏற்றுகின்றார்கள். இரண்டு றக்ர்ர்களும் நிறைந்துவிட்டது. முன்னால நின்றது பிரகாசமான வெளிச்சத்துடன் புறப்பட்டுவிட்டது.

இரண்டாவதினுள் இவன் ஏறுகின்றான். வடிவாக நிற்பதற்கும் இடமும் இல்லாமல் பிடிப்பதற்கும் பிடிமானம் இல்லாமல் ஒரு கையில் றைபிளையும் வைத்துக்கொண்டு தடுமாறுகின்றான். இவனது பரிதாப நிலையைப் பார்க்கின்றான். ஒரு கை முறிந்த போராளி அவன் தனது மறுகையில் றைபிளையும் தாங்கோ என வேண்டுகின்றான். பரா வெளிச்சத்தில் அவன் முகத்தைப் பார்க்கின்றான். என்பு முறிவினால் ஏற்பட்ட பாரிய வலியை அவன் முகம் பிரதிபலிக்கவே செய்கின்றது. றக்ரர் ஸ்ராட் பண்ணி ஓடத்தொடங்க பள்ளம் பிட்டிகளில் ஏறி இறங்க, போராளிகள் போடும் வேதனைக்குரல்கள் இதயத்தை வாட்டுகின்றன. எறிகனைகளால் விரட்டப்பட்ட அவ் உழவு இயந்திரம் இராட்சத வேகமெடுக்கின்றது. திடீரென றக்ரர் நிற்க றைவர் இறங்கிப்போய் முன்னால் பார்க்கின்றான். றக்ரர் முன்சில்லு மீண்டும் காத்துப்போய்விட்டது. இவன் இதயம் பக்கென நின்றமாதிரி இருக்கிறது. என்ன செய்யலாம்? இவன் யோசித்துக்கொண்டிருக்கும்போதே இன்னொரு போராளி இறங்கிப்போகின்றான். அவன் அருகில் இருந்த ஒரு கல்லை எடுத்து வந்து அச்சில்லின் முன்னால் போடுகின்றான்.றைவர் றக்ரரை முன் நகர்த்தி அக்கல்லின் மேல் அச்சில்லையேற்ற முற்பட நகரத் தொடங்குகிறது. உடனேயே அப்போராளி

எதிர்திசையில் நின்று ஒருகாலால் கல்லை நகரவிடாமல் உதைத்து தடுக்கின்றான்.

றக்ரர் சில்லு சற்று சறுக்கினாலும் அவன்கால் " சம்பல் " ஆகும். காற்றில்லாத ரயர். ஆதலால் றிம்மும் ரயரும் அவன் காலை நேரடியாகத் தாக்கும். ஆனால் அவன் அதைப்பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை. இத்தனைக்கும் ஆச்சரியம் றக்ரர் ஏறியதால் அவன் நகரவிடாமல் தடுப்பதுதான். அப்பொழுது இவனுக்கு எங்கோ வாசித்தது ஞாபகம் வருகிறது.

ஒரு இடத்தில் கார் ஒன்று விபத்துக்குள்ளாகி பிரண்டுவிட்டது. அதனுள் ஒரு இளம் பெண் சிக்குப்பட்டு உதவி கேட்டுக்கத்துகின்றாள். அதனைப்பார்த்த ஒருவன் அக்காரை தூக்கிச்சரித்த வண்ணம் மறுகையால் அவளை வெளியில் இழுத்து காப்பாற்றினான். பொதுவாக இக்கட்டான சந்தர்ப்பங்களில் அப்படியான பலம் வருமாம் ஆனால் அவனை அதே மாதிரி பிறகு ஒரு முறை செய்து காட்டும்படி கேட்க, அவனால் காரை அசைக்கக்கூட முடியவில்லையாம்.

அச்சில்லு கல்லின் மேல் ஏறவும் அவன் தனது காலை சரியான நேரத்தில் விலத்தவும் பொருத்தமாக இருந்தது. இன்னொரு போராளி மண்வெட்டிப்பிடியை உரிய இடத்தில் இறக்கினான். இப்பொழுது கல்லைவிட்டு சில்லை முன் நகர்த்திப்பார்க்க சில் நிலத்தில் முட்டவில்லை உடனேயே றக்ரர் விரையத்தொடங்கியது.

நொச்சிக்குளம் நோக்கிப் போய்க்கொண்டிருக்கின்றார்கள். திட்டப்படி எதுவும் நடைபெறவில்லை. ஆனால் அது கவலையையும் கொடுக்கவில்லை. இவ்வளவு போராளிகளையும் பாதுகாப்பான இடத்துக்கு கொண்டு போய்ச்சேர்க்கவேண்டும். விடிந்தால் இவை சாத்தியமில்லை. ஒருமுறை திரும்பி வந்த வழியைப் பார்க்கின்றான். ஏராளமான பரா வெளிச்சங்கள் வானை ஆக்கிரமித்துள்ளன. சண்டை உக்கிரமாக நடந்த வண்ணம் உள்ளது காயங்கள் இன்னும் அதிகமாக வரும். மிகவும் இக்கட்டான நிலையினுள் இறுகப்போகின்றோம். என்பது மட்டும் வெள்ளிடைமலையாகின்றது. றக்ரர் குலுங்கக் குலுங்க முறிபட்ட என்புகளின் விளிம்புகள் உரஞ்சுப்பட உரஞ்சுப்பட ஏற்படும் நோவினால் போராளிகள் கத்துவது வாகன இரச்சலையும் எறிகணை சத்தங்களையும் மீறி காதுகளில் புகுந்து இதயத்தைத் தாக்குகின்றது.

போர்க்காயங்களால் இறப்பவர்களின் கணிசமானவர்கள் நோவினால் ஏற்படும் அதிர்ச்சியினாலேயே இறக்கின்றார்கள். இவன் மனமோ இருதலைக்கொள்ளி எறும்பாகின்றது. றக்ரரை நிறுத்தி எல்லோருக்கும் நோநிவாரணி கொடுப்போமா? என யோசிக்கின்றான். இல்லை அது இன்னும் ஆபத்தானது றக்ரரிலோ, அருகிலோ எறிகணை விழுந்து வெடிக்கலாம். எனவே தாமதிக்கும் ஒவ்வொரு கணமும் ஆபத்தை விலை கொடுத்து வாங்குவதாகவே அமையும்.

நடப்பது நடக்கட்டும் என தன் எண்ணங்களை மாற்றிக்கொண்டான். காயமடைந்தவர்களின் வேதனைக்குரலைக்கேட்பதைத் தவிர்ப்பதற்காகவோ என்னவோ தன் கவனத்தை திசை திருப்ப சண்டை நடக்கும் திசையைப்பார்த்தவண்ணம் உள்ளான்.

இவனுக்கு முதலில் அனுப்பிய பிள்ளையின் ஞாபகம் வந்தது. அவள் தப்புவாளா? இல்லை இப்பவே இறந்திருப்பாளா? நாங்கள் என்ன ஒரு பைந் பிளட்டும் மூன்று பைந் திரவ ஊடகமும் தானே ஏற்றினாங்கள். மனம் அங்கலாய்த்துக்கொண்டிருக்க நொச்சிக்குளம் பாடசாலையை வந்தடைகின்றார்கள்.

நேரம் அதிகாலை 2 மணி. எப்படி நேரம் போனது என விளங்கவில்லை. மருத்துவப்போராளிகள் உட்பட ஆறுபேர்தான் நிற்கின்றார்கள். காயமடைந்தவர்களின் எண்ணிக்கை நூறையும் தாண்டிவிட்டது. எல்லோரும் பாடசாலைக் கட்டிடங்களிலுள்ளும் மரங்களின் கீழும் கிடத்தப்பட்டுள்ளார்கள். அவசியமானவர்களுக்கு மட்டும் முதலுதவிச்சிகிச்சையைச் செய்கின்றார்கள். இப்பொழுது இவர்களிள் வேலைப்பழு அதிகமாகி விட்டது. காயக்காரரை ஏற்றி இறக்குவதிலேயே மூச்சிளுக்கத்தொடங்கிவிட்டது. மேலதிகமாக உதவிக்குப் போராளிகளை அனுப்பும்படி மனோச்சுக்கு அறிவித்திருந்தார்கள். தங்களால் முடிந்த அளவிற்கு வேகமாக செயற்பட்டுக்கொண்டிருக்கின்றார்கள். முதலில் கால் வெட்டி அனுப்பிய போராளியைத் தேடிப்போய் பார்க்கின்றான். நிம்மதிப் பெருமூச்சு வெளிவருகின்றது. நாடித்துடிப்பு இருக்கிறது. ஆனால் இன்னும் அதிர்ச்சியில் இருந்து மீளவில்லை

முதலில் இவர்கள் நின்ற இடத்தில் பரா வெளிச்சமாவது உதவி புரிந்தது. இங்கு அதுவும் இல்லை. எக்காரணம் கொண்டும் வெளியில் ரோச்லைற் அடிக்க வேண்டாம். மேல பயிற்றர்காரன் நிக்கிறான். சாத்திப்போடுவான்

ஒருவன் எச்சரிப்பது கேட்கின்றது. அதற்குள் இன்னுமொரு காயத்துக்கு இரத்தம் தேவைப்படுகின்றது. காவுங்குழுவைச் சேர்ந்த ஒரு போராளியில் இருந்து இரத்தம் பெறப்பட்டு பரிசோதிக்கப்பட்டு ஏற்றப்படுகின்றது.

காயங்களுக்கு அவசியம் தேவைப்பட்ட முதலுதவிகளையும் அவசர சிகிச்சைகளையும் செய்து விட்டார்கள். ஆனால் இப்பொழுது பூதாகாரமாக இருக்கும் பிரச்சனை வேறு, இவ்வளவு காயக்காரர்களையும் பாதுகாப்பான இடத்திற்கு மாற்றியாகவேண்டும் அதுவும் விடிவதற்குள் வாகனங்கள் எல்லாம் கண்டி வீதிக்கு மேற்குப்புறமாகக்கொண்டு செல்லப்பட்டு விட்டன. இப்பகுதியினுடாக பெரிய பஸ்களை கொண்டுவரவும் முடியாது. அப்படி வாகனங்கள் வருவதை எதிரி அறிந்தால் போதும் நிலமை இன்னும் மோசமடைந்துவிடும். சில காயக்காரரை உடனேயே அனுப்பவேண்டும் இல்லையேல் அவர்கள் இறக்கவோ அன்றி தங்கள் அங்கங்களை இழக்கவோ வேண்டிவரும்.

போர்க்களங்களில் காப்பாற்றக்கூடிய சில போராளிகள் இறப்பதும் தவிர்க்கப்பட்டிருக்ககூடிய அங்க இழப்புகள் ஏற்படுவதும் அடிக்கடி நிகழ்பவையே அதற்காக இதனை ஏற்க முடியாது. கள தளமுனைத்தளபதிகளுக்கு வோக்கியில் அறிவித்தல்கள் பறந்த வண்ணம் உள்ளது.

காயக்காரரை பின் நகர்த்துவதற்கு துரிதகதியில் செயல்பட வேண்டும். இன்னும் குறைந்தது 3 மணித்தியலாத்தில் வானம் வெளிக்கத் தொடங்கிவிடும் அதன் பிறகு இவர்களை ஆபத்து சூழ்வது சர்வ நிச்சயம் வாகனங்களைக் காட்டுப்பாதையூடாகவும் ஒழுங்கைகள் ஊடாகவும்"லைற்" போட்டபடி வேகமாக ஓட்ட முடியாது. விமானத்தாக்குதல்களின் அபாயம் இந்த நேரத்தில்தான் அதிகமாக உள்ளது. இங்குதான் ஒவ்வொரு சாரதியும் பாரத்த சாரதி ஆகின்றார்கள். இவர்களின் திறமையைப்பாராட்டாமல் இருக்க முடியாது.

அப்பொழுது அந்த ஆச்சரியமான சம்பவம் நடைபெற்றது. பொதுமக்கள் பலர் போராளிக்குரிய துணிவுடன் அவ்விடத்திற்கு வாகனங்களைக்கொண்டு வந்திருந்தனர்.காயக்காரர்கள் முன்னுரிமை அடிப்படையில் தரம் பிரிக்கப்பட்டு வேகமாக வெளியேற்றப்படுகின்றனர். முதலிரண்டு வாகனங்களும் அனுப்பப்பட்டுவிட்டன.

அடுத்தவாகனம் வரும்வரை ஏனைய போராளிகளைக் கவனித்து கொண்டிருக்கின்றார்கள். அப்பொழுது அந்தச்சம்பவம் நிகழ்ந்தது. கல் றோட்டில் வெறும் றம் உருட்டியமாதிரி MI 24 உலங்கு வானூர்திக்காரன் சரார்,சரார் என றொக்கட் மோட்டர் தாக்குதல்களை மேற்கொண்டான். அச்சத்தம் இங்கு கேட்க எல்லோரும் ஒரு கணம் உறைந்து போனார்கள். அவர்களுக்கு அடிவிழுந்திட்டுதோ! உடனேயே அவ்விடத்திற்கு உதவி அனுப்பவேண்டும். ஆனால் ஆட்களும் இல்லை பொறுப்பாளர் திகைத்துநிற்க வோக்கியில் செய்தி வருகின்றது. பிரச்சனையில்லை மயிரிழையில் சிறு சேதங்களுடன் தப்பிவிட்டோம். அப்பாடா என நிம்மதிப் பெருமூச்சு விட்டபடியே தங்கள் பணியைத்தொடங்கினார்கள்.

வானம் வெளுத்துவிட்டது, நிலம் தெரிகிறது, இவர்கள் இன்னும் அபாயக்கட்டத்தை தாண்டவில்லை கணிசமான காயக்காரர்கள் வெளியேற்றப்பட்டு விட்டனர். அப்போது மனோச் கூறுகின்றார். நீங்க உடனே ஜீப்பில் புளியங்குளம் போங்கோ. அங்க மெயினில இங்கிருந்து போன காயக்காரர்கள் தேங்கிக்கிடக்கின்றார்கள். அதற்கு அங்கால கொண்டுபோய்ச் சேர்க்கவில்லை. இவனுக்கு அதிர்ச்சியாக இருந்தது. முட்டாள்தனமான வேலை. இதற்கு முதல் நாளும் கிபிர் வந்து சாத்தினவன். செல்றேஞ் உள்ள இடம். நூற்றுக்கணக்கான காயக்காரர்கள் மரங்களின் கீழ் கிடத்தப்பட்டுள்ளனர். சில பேராவது உயிரைவிட வேண்டிவரும். எண்ணவோட்டத்தை அலட்சியம் செய்தவன் ஓடிப்போய் ஜீப்பில் தாவி ஏறுகின்றான். அதிலும் இரண்டு காயக்காறர்கள் கிடக்கின்றார்கள் ஜீப் மின்னலெனப்பாய்கின்றது.

ஜீப்பில் விரைந்து கொண்டிருப்பவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. இவர்கள் செல்லும் பாதை முழுவதும் பலநூறு போராளிகள் " கட்அவுட் போட்டு பாதுகாப்பு வழங்கிக்கொண்டு இருக்கின்றார்கள். இராணுவத்தின் பதுங்கித்தாக்கும் தொல்லைகொடுக்கும் தாக்குதல்களைத் தடுப்பதற்காக. எண்பத்தி ஏழாம் எட்டாம் ஆண்டுகளில் இப்படித்தான் பலாலியில் இருந்து வரும் இந்திய இராணுவத்தின் தொடர் வாகன அணிகளுக்கு பாதுகாப்புக் கொடுக்க ஆயிரக்கணக்கான இராணுவத்தினர் யாழ்ப்பாணம் வரை வீதியின் இருமருங்கிலும் நிற்பார்கள் அன்று, சில நூறு வீரர்களுடன் இருந்த இயக்கம் இன்று....... நினைக்க பெருமையாக இருக்கிறது.

நன்றாக விடிந்துவிட்டது. என்ன சங்கதி இங்கு நடக்கின்றது? என

எட்டிப்பார்க்க ஆதவனும் அவசரப்படுகின்றான். போராளிகளினதும் எதிரிகளினதும் இரத்தத்தால் இம்மண்மட்டுமல்ல வானம் சிவந்தே காணப்படுகின்றது.

போர் வேள்வியின் விளைவுகளை கண்ணுற்ற கதிரவன், மற்றுமோர் குருசேத்திரத்தைக் காண்கின்றான்.



அதுசரி ஏன் சோழர்களை சூரிய வம்சம் என்கிறவர்கள். சோழர்களுக்கும் எங்களுக்கும் என்ன சம்பந்தம்? நாங்கள் அவர்களின் வழித்தோன்றல்களா? இம்மண்ணின் பூர்வகுடிகளல்லவோ! அவன் மனம் சூரியனில் இருந்து சோழவம்சத்துக்கும் ஈழத்தமிழருமென எட்டி எட்டிப்பாய்கிறது. இது ஆராச்சியாளர்களின் வேலை. இங்கு நாங்கள் உயிரோடு வாழவேண்டுமென்றால் போரிட வேண்டும். உயிரியல் பார்வையில் நாங்களும் சாதாரண உயிர்தான் வாழ்வதற்காகப் போராடுகின்றோம். அவ்வளவுதான்" என முடிவுக்கு வருக்கின்றான்.

இப்ப அந்தப்பிள்ளை உயிரோட இருப்பாளா அல்லது இறந்திருப்பாளா? மனம் கடமையை எண்ணுகின்றது.

முதல் முறையாக களமுனையில் இருந்து 300மீ தூரத்தில் இரத்தம் ஏற்றி அனுப்பிய காயம். காப்பாற்றப்படுமாயின் அதுவொரு சாதனையாகவே அமையும். இராணுவ வெற்றிகளும் தோல்விகளும் வேறுபட்டவை. விளைவுகள் வெளிப்படையாகத் தெரிபவை. போர் மருத்துவத்தைப்பொறுத்தவரை அப்படியில்லை மருத்துவத்துடன் நேரடியாக சம்மந்தப்பட்டவர்களுக்குத்தான் தார்பரியம் விளங்கும். காப்பாற்ற முடியாத காயத்தை உடையவர்கள் உயிர்பிழைத்திருப்பதும் உயிர் பிழைத்திருக்க வேண்டியவர்கள் இறந்திருப்பதும் இது சாதனையில் அடங்குமா? அல்லது வேதனையில் அடங்குமா? இவன் மனம் ஏங்குகின்றது.

தியட்டருக்கு போனவுடன் ஆளைப்பற்றி விசாரிக்க வேண்டும். தன்னுள் கூறிக்கொள்கின்றான்.

ஜீப் சிறு வீதியின் வயல் வரம்புகள் எல்லாம் ஏறி,ஏறி பாய்கின்றது. காயக்காரர்கள் ஐயோ! அம்மா! என்று கத்துகின்றார்கள். வயல் வெளிகளினூடு அவர்கள் விரைகின்றார்கள். தூரத்தில் உலங்கு வானூர்தி தாக்குதல் நடத்துவது தெளிவாகத் தெரிகின்றது. அது இவர்கள் பக்கம் வருமாயின் றொக்கட் மோட்டரினால் கலைத்துக் கலைத்து அடிக்கப்படுவார்கள்.

இவர்களிடம் இருப்பதுவோ சாதாரண இயந்திரத்துப்பாக்கிகளே. அதனால் உலங்கு வானூர்தியைத் தாக்குவதென்பது ‘‘கைவிளக்குமாத்தால் யானையை அடிப்பது’’ போன்றது. சற்று எட்ட வயல் வெளியில் விழுந்து வெடித்து தூசு மண்டலத்தையும் புகையையும் கிளப்பும் எறிகணைகள் ஆங்கிலப்படங்களை நினைவூட்டுகின்றது. உயிர் தப்ப இவர்களுக்கு இருக்கும் ஆயுதம் வேகம் மட்டுமே.

இவன் தன்னிடம் இருக்கும் பெதடீன் ஊசிமருந்து இரண்டையும் காயக்காறருக்கு ஏற்றுகின்றான். வலி சற்று குறைவாக இருக்கட்டும். இப்பொழுது வயல் வெளியில் இருந்து காட்டுத்துண்டு ஒன்றினுள் ஜீப் துளைந்துவிட்டது. இனி கெலிக்கு பயப்படத்தேவையில்லை. மனம் எண்ணுகையில் காட்டு மரமொன்றில் படார் படீர் என வந்து அடித்து வெடித்த எறிகணையால்

வீதிக்குக் குறுக்கே பாரிய மரக்கொப்பு இலை குழைகளுடன் விழுகிறது. அதையும் ஏறி மிதித்துக்கொண்டு இவர்களின் வாகனம் விரைகின்றது.

காட்டு வீதியின் ஓரத்தில் மினிபஸ்சின்மேல் பொருத்தப்பட்டிருக்கும் கரியல் அப்படியே கழன்று விழுந்து கிடக்கின்றது. எப்படி இதுவென்று கேட்க சாரதி சொல்கிறான். முதல் காயத்தைக்கொண்டுவந்த மினிபஸ்சை கெலி கலைக்க தலை கால் தெரியாமல் ஓடிவர பாலைமரக்கொப்பு கரியலில் ஒரு அடி அப்படியே விழுந்து விட்டது. ஆள் புளியங்குளத்தில் போய்நிண்டுதான் திரும்பிப்பார்த்தவராம். ஒரு சிரிப்புடன் கூறும் அவனின் குரலில் தான் அந்த மினிபஸ் சாரதியும் திறமையானவன் எனும் தொனி தென்படுவதுபோல் இருக்கின்றது.

இவன் கூறுகிறான் மினிபஸ்சிலும் பார்க்க ஜீப் சின்னன்தானே! இவன் கூறுவதன் காரணம் அவனுக்கு விளங்கியிருக்க வேண்டும். அவன் தனது கடமையில் கண்ணாகின்றான்.

காலை 7 மணியளவில் புளியங்குளம் பிரதான மருத்துவ முகாம் வந்தடைகின்றார்கள். பார்க்க மகிழ்ச்சியாக இருக்கின்றது. இவர்கள் எதிர்பார்த்ததற்கு மாறாக அங்கிருந்த காயமடைந்த போராளிகள் அப்புறப்படுத்தப்பட்டிருக்கின்றனர். அப்பாடா! என்றிருக்கின்றது

ஆபத்தான கொலைவலயத்தினுள் இருந்து வெளி வந்தாச்சு இவர்கள் வந்த சில நிமிடங்களில் இராணுவ முகாமில் இருந்து கைப்பற்றப்பட்ட கனரக ஆயுதங்கள் புதிய உளவியந்திரம், பீல்ட் மோட்டபைக் என்பவற்றுடன் ஏனைய போராளிகளும் வந்து சேர்ந்தனர். ஜெயசிக்குறு எதிரியின் கழுத்தில் பிடித்து பிடரியில் பலமான அடி ஒன்றைக்கொடுத்து கைப்பற்றப்பட்டவை. இவ்வாயுதங்களுக்கு மட்டும் கண்கள் இருக்குமாயின்! அவை கண்ணீர் சிந்துவது தவிர்க்க முடியாதது. எதிரியிடம் இருந்து கைப்பற்றப்படும் ஒவ்வொரு ரவை முதல் ஆட்லறிவரையும் பல கதைகளை தன்னகத்தே கொண்டிருக்கும்.

ஜெனரல் ரத்வத்தை சொன்னார் ஜெயசிக்குறு விரைவில் முடிந்துவிடும். புலிகள் படுத்துவிடுவார்கள் என நிலமையோ! இப்பொழுதுதான் தாய்ச்சமரின் மூன்றாம் கட்டம் முடிந்திருக்கின்றது. என அறிவிக்கின்றது.

எண்ணவலைகளால் பின்னப்பட்டவன் தனது அடுத்த பணிக்காக பொறுப்பாளரின் பணிப்பை எதிர்ப்பார்த்துக் காத்திருக்கின்றான்.

மனோச் வந்து சொல்லுகிறார். "டொக்டர் வாங்கோ போவம் நளன்ர பக்கத்தில காயம் குவியுதாம். உடனேயே புறப்பட ஆயத்தமானார்கள். வேறு சிலமருத்துவப்போராளிகளும் இவர்களுடன் இணைந்து கொள்கின்றனர். குறைந்தது இரண்டரை மணித்தியாலம் வாகன ஓட்டத்திற்கு பின்புதான், வன்னிமேற்கில் அமைக்கப்பட்டிருக்கும். அப்பிரதான மருத்துவமுகாமைச் சென்றடையலாம். A,9 வீதியை ஊடறுத்து ஜெயசிக்குறு இராணுவத் தொடரை உடைத்து மறுபக்கம் தாக்குதல் தொடுக்கும் அணியுடன் இணைந்துதான் சென்றிருக்கவேண்டும். அது சாத்தியமில்லாமல் போக இவ்வாறு செல்கின்றார்கள். பிக்கப் வாகனம் வேகமெடுக்கின்றது. உடற்சோர்வால் நித்திரை தூக்கியடிக்கின்றது. இவனும் ஏனையவர்களும் நித்திரை கொள்வதும் வாகனம் பள்ளங்களில் விழுந்து குலுங்கும்போது கண்விழிப்பதுமாக இருக்கின்றார்கள். அப்பொழுது இவன் தன்னுள் எண்ணுகின்றான். எங்களை மாதிரித்தானே றைவரும் நித்திரை முழித்து இரவு பகல் ஓடினவன். ஆள் இப்ப நித்திரை தூங்கினால் எப்படி இருக்கும்? மனம் ஒருமுறை எண்ணிப்பார்த்ததில் சாரதியின் முக்கியத்துவம் விளங்கியது. என்ன இருந்தாலும் நித்திரை கொள்வது நல்லது இனி எப்ப நித்திரைக்கு சந்தர்ப்பம் கிடைக்குதோ தெரியாது.

கள தள மருத்துவர்களின் சமரானது திட்டமிட்ட சமர்கள் ஆரம்பித்து சில மணித்தியாலங்கள் பின்னர் ஆரம்பிக்கும், பின்னர் தொடரும் நாட்களில் வேகம் எடுக்கும். பிறகும் மந்தகதியில் தொடரும் சிலவேளை கிழமைகளாக இழுபடும் போராக மாறுவதும் உண்டு. சந்தர்ப்பம் கிடைக்கும் நேரங்களில் எல்லாம் நித்திரை கொள்ளுவதை வழமையாக்கியிருந்தார்கள்

இவர்கள் வீதிக்கு மேற்காக நெடுந்தொலைவில் அமைக்கப்பட்டிருந்த தற்காலிக சத்திரசிகிச்சைகளுக்கான வசதிகளுடன் கூடிய மருத்துவ முகாமைச் சென்றடைகின்றார்கள்.இது ஒரு பொதுமகனின் வீடு அதனை இவர்கள் என்ன தேவைக்கு எனக்கேட்டவுடன் உரிமையாளர்கள் வழங்கியிருந்தனர். அதனைச் சில மணித்தியாலங்களினுள் போர்ச்சிகிச்சைக்கான நவீன வசதிகளைக்கொண்ட மருத்துவமனையாக மாற்றியிருந்தார்கள்.

இவர்கள் எதிர்பார்த்ததிற்கு மேலாக நிறைய காயக்காரர்கள் கிடத்தப்பட்டுள்ளனர். அங்கு பணிபுரியும் பிரதம மருத்துவர் இவர்களிடம் விபரங்கள் கேட்டறிந்தார். உடனே கூறினார். நாங்கள் வன்னி கிழக்கில் இருந்த ஆளணி வளங்களை எல்லாம் இங்காலை கொண்டு வந்திட்டம் திட்டப்படி காயங்கள் அங்காலவராது என்பதால இப்ப அங்கால நிற்கும் ஒரு சிலரும் நீங்கள் அனுப்பின காயங்களுடன் மிகவும் கஸ்ரப்படுவினம். நீங்கள் இன்னும் சிலரைக்கூட்டிக்கொண்டு அங்கால போங்கள்.

மீண்டும் வாகனத்தில் புறப்படும் இவர்களின் நிரந்தர சத்திரசிகிச்சைக்கான வசதிகளுடன் கூடிய மருத்துவமனையை வந்தடைகின்றனர்.

அம்மருத்துவமனை நவீன வசதிகளை உள்ளடக்கியதாக அமைக்கப்பட்டுள்ளது. சூரியஒளி உட்புகமுடியாத மக்கள் நடமாட்டம் அற்ற காடொன்றினுள் இதனைக்கட்டுவதற்கு பாரிய முயற்சி தேவையாக இருந்தது. மூலப்பொருள், உபகரண, ஆளணி வசதிகள் இல்லாத சூழலில் இப்படி அமைப்பதென்பது உண்மையில் கடினமான ஒன்றுதான். இராணுவ ஆய்வாளர்கள் இன்னும் வியப்புடன் கேட்கும் கேள்வி இதுதான் எப்படி இவர்கள் இவ் யுத்தக்காயங்களைச் சமாளிக்கின்றார்கள்? என்பது. எதிரியோ நாங்கள் காயக்காரரை சயனைட் கொடுத்துக்கொல்கின்றோம் என கூறிய வண்ணம் உள்ளது நினைவில் கொள்ளத்தக்கது.

மேற்படி போர் மருத்துவமனை A,B,C எனக் குறிப்பிட்ட சத்திரசிகிச்சைக்கான அறைகளுடன் அனுமதிக்கும் பகுதி, மீள உயிர்ப்பளிக்கும் பகுதி இரத்தவங்கி, ஆய்வுகூடம், தொற்றுநீக்கும் அறை, மருத்துவர்கள், ஏனையவர்கள் ஓய்வெடுக்கும் பகுதி என பலவாகப்பிரிக்கப்பட்டு வடிவமைக்கப்பட்டுள்ளது. மருத்துவதேவைக்கான இலத்திரனியல் சாதனங்கள், குளிரூட்டி வசதி, பிரகாசமான ஆனால் நிழல் வீழ்ந்ததாக வெப்பம் வெளிவிடாத மின்சார விளக்குகள் போன்ற இன்னோரன்ன வசதிகளையும் உள்ளடக்கியுள்ளது. உட்பகுதி மென் பச்சை நிறம் பூசப்பட்டிருக்கிறது. வெளிப்பகுதி அனைத்தும் உருமறைப்புக்குரிய நிறங்கள் பாவிக்கப்பட்டிருப்பதனால் அம்மருத்துவமனை காட்டோடு காடாக மறைந்துள்ளது.

முல்லைத்தீவு வெற்றிச் சமருக்கு முன்னர் அனைவரையும்

அச்சுறுத்திய விடயம் இதுதான் சில மணித்தியாலங்களினுள் காயமடையும் பலநூறு போராளிகளை எவ்வாறு காப்பாற்றுவது. ஒரு சில மருத்துவர்களையும் மருத்துவமாணவர்களையும், மூன்றுமாதமாகவே சத்திரசிகிச்சைக்கான தாதியர் பயிற்சி பெற்ற போராளிகளையும் குறைந்த உபகரண வளங்களையும் கொண்டு எவ்வாறு சமாளிப்பது.

இந்த நேரத்தில் 91ம் ஆண்டு நடை பெற்ற சந்திப்பொன்றில் இயக்க மருத்துவர்களுக்கு தலைவர் கூறியது ஞாபகம் வருகின்றது. " பல காரணிகளால் எம் போராட்டம் பின்னடைவைச்சந்திக்கலாம். யாழ்போதனா வைத்தியசாலை நாங்கள் பாவிக்கமுடியாத நிலைவரலாம். எனவே மருத்துவரீதியாக வரும் பிரச்சனைகளுக்கு முகம் கொடுக்கக்கூடியவாறு உங்களை வளர்த்துக்கொள்ளுங்கள். என அக்கால கட்டத்தில் உருவாக்கப்பட்ட தமிழீழ மருத்துவக்கல்லூரியும் போராட்ட வரலாற்றில் மருத்துவப் பழுக்களைச்சுமக்க கைகொடுக்கின்றது. எப்பொழுதும் தாங்கள் சொந்த பலத்திலேயே நம்பிக்கை வைக்கும் இயக்க மரபு மருத்துவத்துறைக்கு விதிவிலக்கு அல்லவே. அதனால் இவர்கள் பிரத்தியேகமான மருத்துவமனைகளை அமைத்துக் கொண்டார்கள். முல்லைத்தீவுச்சமரை சமாளித்ததாலும் தொடர்ந்து சமர்களுக்கு முகம் கொடுத்ததாலும் உள்வாங்கப்பட்ட அனுபவங்களுக்கு ஏற்ப மருத்துவப்பிரிவு தனது தேவைகளைப் பூர்த்தி செய்ய முயற்சிக்கின்றது.

மருத்துவமனையினுள் நுழைந்தவன் மேற்படி காயக்காரப்பிள்ளையை பற்றி விசாரிக்கின்றான். சத்திரசிகிச்சைக்கூடத்தினுள் உள்ளெடுக்கப்பட்டுவிட்டாள் என்பதை அறிந்தவுடன் நின்மதிப்பெருமூச்சு விடுகின்றான். மூன்று நாட்கள் தொடரான வேலை அழுக்குப்படிந்த உடல் இக்கோலத்தில் சத்திரசிகிச்சைக்கூடத்தினுள் செல்லமுடியாது. உடனே தங்ககம் சென்றவன் குளித்துத்தன்னைச் சுத்தம் செய்கின்றான். அவசர அவசரமாக சிகிச்சைக்கூடத்தினுள் ஓடுகின்றான். பெரும்பாலும் அம்மருத்துவமனையில் நிறைந்துள்ள காயக்காரர்களுக்கு சிகிச்சையளித்து முடித்து வெளிவர இன்னும் இரண்டு நாட்கள் எடுக்கும்.

இவன் உட்சென்று அனுமதிக்கும் பகுதியில் பார்க்கின்றான். மேற்படி போராளி அதிர்ச்சியில் இருக்கின்றாள். அவளுக்கு குருதி ஏற்றப்பட்டுக்கொண்டிருக்கின்றது. இந்நிலையில் சிகிச்சைக்கான மயக்க மருந்தை அவள் உடல் தாங்காது. சிலவேளைகளில் அதனாலேயே உயிரிழப்பு

ஏற்படலாம் மீண்டும் இரத்தம் திரவ ஊடகம் என்பன ஏற்றபடுகின்றது. ஓரளவு மீளவுயிர்ப்பளித்தல் செயற்பாடு திருப்தியளித்தவுடன் நோயாளி உள்வாங்கப்பட்டு சத்திரசிகிச்சைக்கான மேசைமீது கிடத்தப்படுகிறாள்.

உள்ளே காணப்படுபவர்களின் கண்கள் மட்டும் வெளித்தெரிகின்றன. உடலில் ஏனைய பாகங்கள் தொற்றுநீக்கப்பட்ட ஆடையினால் போர்த்தப்பட்டுள்ளது. "நிஞ்சா" படங்களில் வருபவர்கள் போல் காட்சியளிக்கின்றனர். ஆனால் ஆடைகள் வெந்நிறமாக உள்ளது. எனினும் அவர்களின் கண்களில் உயிர்களைக் காப்பாற்றுவதற்கான சுறுசுறுப்பு தெளிவாகத் தென்படுகின்றது. பெரும்பாலும் இவை நாளை இரத்தச்சிவப்பேறிவிடும் பம்பரமாக சுழன்று கொண்டிருக்கும் இவர்களிடையே வார்த்தைப்பரிமாற்றம் குறைவாகவே காணப்படுகின்றது. அனைவரும் ஒரு ஒழுங்கில் முடக்கிவிடப்பட்ட இயந்திரங்களாக இயங்கிக் கொண்டிருக்கிறார்கள். இது அவர்கள் தங்கள் தங்கள் பணிகளில் சிறப்புத்தேர்ச்சி பெற்றிருப்பதை விளங்கிக் கொள்ள போதுமானதாக இருக்கின்றது.

அக்காயக்கார போராளி சத்திரசிகிச்சைக்கான மேசையில் ஏற்றப்பட்டவுடன் உடற்காயங்கள் பரிசோதிக்கப்படுகின்றது. பின்புறம் ஊடுருவிய காயம் நிச்சயம் வயிற்றினுள் ஊடுருவி இருக்கும். எனவே நிச்சயம் அதனை வெட்டித்திறப்பது அவசியம். வலது தொடையில் இருக்கும் பாரிய காயம் சத்திரசிகிச்சை மூலம் துப்பரவு செய்யப்பட வேண்டும். வெட்டியகற்றப்பட்ட காலின் மேல்பகுதி என்பு வெட்டப்பட்டு சீராக்கம் செய்யப்பட வேண்டும்.

மேற்படி சத்திரசிகிச்சைமுடிவடைய நான்கு மணித்தியாலங்கள் கடந்துவிட்டது. அதனைத்தொடர்ந்து அப்போராளி அதிதீவிர சிகிச்சைப்பிரிவிற்கு அனுப்பப்படுகின்றாள். மிகுதிக் காயக்காரருக்கு முதல் சுற்றுசிகிச்சையளித்து முடிய இரண்டு நாட்கள் நகர்ந்து விட்டது. மேற்படி போராளி இன்னும் சுய நினைவினைப்பெறவில்லை, இதுவரை நான்கு பைன்து இரத்தமும் 30 பைந் திரவ ஊடகமும் ஏற்றப்பட்டு விட்டது. சிறுநீர் தேவையான அளவு வெளியேறுகின்றது. இதுவொரு நல்ல அறிகுறி எனினும் காய்ச்சல் காணப்படுகின்றது. இதுவொரு அபாயமான நிலை உரிய முறையில் மருத்துவப்பராமரிப்பு தொடர்கின்றது.

களமுனையில் காப்பாற்றப்பட்டவள், வரும் வளியில் அபாயங்களைத்தாண்டியவள், காப்பாற்றப்படக்கூடிய இடத்தில் இறப்பது என்பது மன வேதனையைத்தரக்கூடியது. இப்போராளி உயிர் தப்புவதாக இருந்தால் களமுனைக்கு அருகாமையில் குருதிமாற்றீடு செய்வது மருத்துவப்பிரிவினால் உத்தியோக பூர்வமாக ஏற்றுக்கொள்ளப்படும். எனவே எப்படியும் இவள் தப்பவேண்டும். இவன் மனம் மீண்டும் மீண்டும் அதனையே எண்ணுகின்றது.

மூன்றாம் நாளும் வந்துவிட்டது. இன்னும் அப்போராளி சுயநினைவு அடையவில்லை. நாடித்துடிப்பு அதிகமாக இருக்கிறது, இரத்த அழுத்தம் பிரச்சனை இல்லை எனினும் நம்பிக்கைதுளிர்விடுகின்றது. இவள் எழும்பினவுடன் தனது காலைப்பார்ப்பாள். இனித்தன்னால் வழமைபோல் ஓடியாடித்திரிய முடியாது என்பதை எண்ணி மனதினுள் அழுவாள், ஏங்குவாள், இரத்த உறவுகளைத் தேடுவாள், ஆனால் அவள் உறவுகள் எங்கிருக்கின்றனவோ தெரியாது. தெரிந்தாலும் இரகசியம் காத்தல் காரணமாக அவர்களை இங்கு அனுமதிக்கமுடியாது. அவளை ஆறுதல்படுத்தும் பணியையும் போராளிகளே செய்யவேண்டும் உடல் பலவீனம் மனஉறுதியைத் தாக்கும். அதனைத்தாக்குப்பிடித்து வெளிவருவது போராளிகளுக்கு வழமையானதே, எனினும் கடினப்பட வேண்டும். பலநூறு வருடங்களாக திருமணம் செய்வது பிள்ளைகளை வளர்ப்பது எனும் குடும்பம்சார் கலாச்சாரத்தினுள் சுழன்றவர்கள் இன்று ஒரு தேசசிற்பம் செதுக்க புறப்பட்டுள்ளார்கள். அதற்கான விலையையும் செலுத்தி விளைவுகளையும் சந்திக்கின்றார்கள்.

ஓ.......... என் தேசமே! நீ விரைவில் விடுதலையடைவாய் அப்பொழுது வீரச்சாவை தழுவியவர்கள் தவிர, விழுப்புண்ணடைந்தவர்கள், முன்னான் சிதைந்து இயங்க முடியாதவர்கள், அங்கங்களை இழந்தவர்கள் என கனிசமானவர்கள் உன்னில் நடமாடுவார்கள், அவர்களை சுமையாக நினைப்பாயா? இல்லை சுகமாக நினைப்பாயா?

